*Vaiciyamittira<u>n</u>*

*Puttakam 5, ilakkam 12*

*October 11, 1915*

Record no. 1102

REG. NO. M.—940.

சிவமயம்.
வேலுமயிலுந் துணை.

# வைசிய மித்திரன்

# THE VYSIA MITRAN.

பிரதி சோமவாரமும் பிரசுரிக்கப்பெறும்.

"எப்பொருள் யார்யார்வாய்க்கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருக்குறள்.

சந்தா விபரம்
வருடம் 1-க்கு ... ... ரூ. 3—0—0
ஆறு மாதம் 6-க்கு ... ... ரூ. 2—0—0
ஸிலோன், இந்தியா, ஸ்ட்ரெயிட்ஸ்...
வருடம் 1-க்கு ரூ. 4—8—0

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு மாதம் 1-க்கு ரூபாய் 20-0-0
நீண்டகாலம் விளம்பரம் செய்வோர்கள் எழுதிக் குறைந்த விகிதம் தெரிந்து கொள்ளலாம். சில்லரை விளம்பரங்களுக்கு தடவைக்கு வரி 1-க்கு அணா 2.

புத்தகம் 5. | தேவகோட்டை ராக்ஷஸ-ஸூ புரட்டாசி-மீ 25-உ திங்கட்கிழமை 1915-ஸூ அக்டோபர்-மீ 11-உ | இலக்கம் 12.

## என் குருநாதன்.

IV.

பலவேறு வகைப்பட்ட சீர்திருத்தக்காரர்கள் இந்தியாவில் தலை நீட்டிக்கொண்டிருந்த பத்தொன்பதாவது நூற்றாண்டிலே, 1835ஞு பிப்ரவரிமீ 20உ யன்று வங்காளத்தைச்சேர்ந்த ஒரு சிறு கிராமத்திலே, அந்தணர் குலத்திலோர் ஆண்மகவு உதித்தது. அக்குழந்தையின் தாய்தகப்பன் இருவரும் பரம வைதிகர்கள். பிராம்மணர்களில் வைதிகர்களுடைய கர்மமானது சகலப் பற்றுதலையும் ஒழிப்பதேயாகும். அப்பாதிரியான அந்தணன் செய்ய வேண்டிய வேலைகளைத்தவிர அதிகமாக எதையும் செய்துவிடக்கூடாது. அவன் யாரிடத்திலிருந்தும் யாசகம் வாங்கக்கூடாது. இவ்வளவு நிபந்தனைகளுக்கும் உட்பட்ட அவனுடைய ஜீவியமானது எவ்வளவு கட்டுப்பாடுடையதென்பதை நீங்கள் நன்றே தெரிந்துகொள்ளலாம். இவ்வந்தணர்களுக்குள்ள யோக்யதை யெல்லாம் அவர்களால் செய்யப்படும் ஸர்வஸங்கப் பரித்யாகத்தால் வருவதேயாகும். இவர்கள் பரம ஏழைகளேயாயினும் பண ஆசை இவர்களுக்குக் கிடையாது. இந்த ஏழைகள்தாம் லோக ஆசாரியர்கள். இம்மாதிரியான ஏழையாக இருந்தபோதிலும் ஒரு மனிதன் பசியுடன் செல்வதைப் பார்க்க மனமிசையாத தனது மனைவியுடன் இல்லற தர்மத்தை இனிது நடத்தாமற்போகான். அந்தணருடைய மனைவி போஜனம் செய்வதற்கு முன்னால் தன்னை யண்டிவந்தவர்களுக்கெல்லாம் அன்னம் அளிக்கப்பட்டதாவென்று கவனிக்கவேண்டியது அன்னவளின் அரியவேலைகளில் முதன்மைபெற்றிய காரியமாகும். தாயாராகிய இவள் குழந்தைகளாகிய உலகத்தவர் உண்ட பிறகே தன் பசியை ஆற்றிக்கொள்ள வேண்டும்.

இதுதான் இந்திய ஸ்திரியின் உத்கிருஷ்டமான தர்மம். இதை இனிது நிறைவேற்றுவதால் ஸ்திரீ உலக மாதாவாகக் கருதப்படுகிறார்கள். இதனாலேயே அன்னையானவள் முன்னறி தெய்வமாய் இந்தியாவில் கொண்டாடப்படுகிறார்கள். ஏற்கனவே பிறந்ததாகச் சொல்லிய குழந்தைக்குத்தாயாகியபெண் பிள்ளை இந்திய ஸ்திரீக்கு ஒரு உதாரணமாவாள். எவ்வளவுக்கெவ்வளவு ஜாதியானது உயருகிறதோ அவ்வளவுக்கவ்வளவு கட்டுப்பாடானது அதிகரிக்கும். கீழ் ஜாதியான் எதை வேண்டுமென்றாலும் உண்ணலாம் உறங்கலாம்; ஆனால் அவனுடைய ஜாதி உயர உயர அவன் அடங்கவேண்டிய சட்டதிட்டங்கள் அதிகரிக்கின்றன. அதுவும் இந்தியாவில் பிராம்மணன் அநுசரிக்கவேண்டிய விதிகள் எண்ணிக்கைக்கு மேற்பட்டவைகளாகும். இவர்களுடைய வாழ்க்கையை ஒரு மேனாட்டார் கவனிப்பாராயின் அது ஓர் ஸந்யாஸியின் வாழ்க்கைப்போலிருக்கும். ஆயினும் அவர்களுடைய நோக்கம் மிகுந்த சிலாக்யமானதேயாகும். ஒரு அரிய எண்ணம் இச்சாதியாருள் உதிக்குமானால் அது பழுத்துப் பலன் தரும் வரையில் அதனால் உலகத்தவர் பயன்படும்வரையில், தலைமுறை தலைமுறையாய் கையாடப்படும். புதிய எண்ணங்கள் இவர்களுடைய மனதில் இடம் பெறுவது இலகுவான காரியமாகும். ஆனால் உத்கிருஷ்டமான நவீன ஆராய்ச்சியின் பயனாக உதிக்கும் ஞானமோ ஒரு காலும் இவர்களைவிட்டகலாது.

ஆகையினால் வைதிகர்களாகிய இவர்கள் தம்முடைய தனித்த உணர்ச்சியுடனும் மனபாவனையுடனும் இருப்பர். இவர்களுடைய ஜீவனம் இன்னின்ன மாதிரி நடைபெறவேண்டுமென்று பிராசீன கிரந்தங்கள் கூறுகின்றன. அந்த கிரந்தங்களில் கூறப்படும் விஷயம் இவர்களால் உறுதியுடன் கைக்கொள்ளப்படும். தம்முடைய ஜாதியாரால் சமையல் செய்யப்படாத அன்னத்தைப் புசிப்பதைவிட தமது உயிரையே விட்டுவிடுவார்கள். தன்னுடைய உயிர்போகிறதாக இருந்தபோதிலும் இறக்கும் தருவாயிலுள்ள ஒருவனை ஆபத்திலிருந்தும் காப்பாற்றவேண்டும். இதுவே இந்திய தேசத்தின் தர்மம். இதைக் கடைப்பிடிக்கவேண்டியவர்கள் அந்தணரேயாவர். இந்த தேசத்தின் பிராசீன கல்வி யாராய்ச்சியுடையவர்களுக்கு இவ்விஷயம் புதியதாகத்தோன்றாது. எப்படி ஒரு பிக்ஷுகனைக் காப்பாற்ற வேண்டி ஒரு குடும்பத்தின் தாயார் தகப்பனர் குழந்தைகள் முதலாயினோர் இறந்துபட்டனர் என்ற மஹா பாரதக் கதை உண்மை என்பதை அறியாமலிரார். இவ்விதமான தர்மிஷ்டர்கள் இப்பொழுதும், இந்த கலிகாலத்திலுங்கூட இல்லாமலில்லை. இவர்களைச்சேர்ந்தவர்களே என் குருநாதனின் தந்தையாரும் அவருடைய தாய் பத்னியாரும். இவர்களுடைய ஏழ்மைத்தனம் புவியிலும் பெரிதாக இருந்தபோதிலும், பிச்சைக்காரனுக்கு அன்னமிட்டு என் குருவின் தாய் பட்டினி கிடந்த சமயங்கள் எவ்வளவோ உண்டு. இந்த மாதிரியான தம்பதிகளுக்குப் பிறந்தே மேற்சொல்லப்பட்ட குழந்தையாகும். இக்குழந்தை பிறந்தபொழுதிலே இது ஒரு புதுமாதிரியான மனபாவனையுடன் இருக்கலாயது. தனது பூர்வஜன்மம் யாது என்பதையும், இப்பொழுது புவியில் தோன்றியதின் காரணம் யாது என்பதையும், அது அறிந்திருந்ததோடு, இப்பெருமுயற்சியில் அதற்கு வேண்டிய சௌகர்யங்களும் இயற்கையாகவே பொருந்தி இருந்தன.

இக்குழந்தையின் இளமைப்பருவத்திலே இதன் தந்தையார் அந்தகன் பதியனுஜெனர். அதன் பின்னர் அவர் பள்ளிக்கூடத்திலிசேர்க்கப்பட்டார். பிராம்மணப் பையன் பாடசாலையில் படிக்கவேண்டுவது அவசியம்; வித்யாசம்பந்தமான விஷயத்தில் தலையிட்டு அந்தொழிலை இனிது நடைபெறச் செய்யவேண்டியதே இந்த ஜாதியாரின் முக்கியமான கடமையாகும். பிராசீன காலத்திலும், இப்பொழுதும் வழக்கத்திலிருந்து வரும் சன்னியாசிகளின் வித்யா விசேஷமானது, தற்கால நவீன வித்யாவழியை விட்டு விலகியதாக இருக்கும். வித்யார்த்தியாக இருப்பவன் சம்பளம் கொடுக்க வேண்டுவதில்லை. ஏனென்றால் வித்யை விற்கப்படக் கூடாதது, தேவ தாசம் பொருந்தப்பெற்றதுமான கல்வியை விற்பதற்கு எவருக்கும் உத்திரவில்லை. மாணுக்கர், உபாத்தியாயர்களால் சம்பளமில்லாமலே சேர்த்துக்கொள்ளப்படுவர். அநேக சமயங்களில் மாணுக்கர்களுக்கு அன்னமும் ஆடையும் கூட அன்புடன் தமது குருவினுல் அளிக்கப்படும். இன்னம் [illegible] காலத்தில் [illegible] கடந்த [illegible] காலங்களிலும் [illegible] சமயங்களிலும் [illegible] சம்பந்தப்பட்ட [illegible] முழு மனத்துடன் செய்யப்படும்.

நான் சொல்லிவந்த சிறுவனுக்கு ஒரு மூத்த சகோதரன் உண்டு. அவர் கல்வியில் பெரியதோர் மேதாவிப்பட்டம் பெற்றவர். அவருடன் வித்யாப்யாஸம் செய்ய இந்தச் சிறுவனுக்குக் கொஞ்சம் வாய்க்க புண்டு. இம்மாதிரியாகப் பாடசாலைக்குச் சென்றுகொண்டிருந்த சிறுவன், பள்ளிக்கூடத்துப் பாடங்கள் யாவும் உலகப்பற்றுதலை யதிகம் கற்பிப்பனவாயிருப்பதையும், உலகாயதம் மீடித்திரமதென்பதையும், நன்குணர்ந்து ஆத்மதத்வமே மனிதர்களால் அறியப்படவேண்டிய விஷயமென்றும், இதை யப்யாசம் செய்யவே மனிதர்கள் பூமியில் ஜெனிக்கிறார்கள் என்றும் தெரிந்துகொண்டு ஆத்மதத்வ சம்பந்தமான கல்வி எவர் கற்றுக்கொடுப்பரென்று தேடலாயினர். இவருடைய தந்தையார் இறந்துபட்டமையாலும், இவரின் நிலை பரமதரித்திர நிலையாதலாலும் தனது ஜீவனோபாயத்தைத் தானே தேடவேண்டியவராயினர். அதனுல் கல்கத்தாவின் சமீபத்திலுள்ள ஒரு கோவில் குருக்கள் வேலையை ஒப்புக்கொண்டார். குருக்கள் தொழிலானது பிராமணர்களால் தாழ்ந்ததெனக் கருதப்படும். நம் தேசத்து தேவாலயங்கள் யாவும் மற்ற தேசத்து கோவில்களைப் போன்றவையல்ல. பொதுஜனங்கள் சிந்தனை செய்யுமிடங்களாக மேனாட்டு ஆலயங்கள் கருதப்படுவதுபோல் இந்திய ஆலயங்கள் கருதப்படுவதில்லை. தனவந்தர்களால் தமது பொருளின் பயனுக தர்மகார்யமான ஒரு கோயில் கட்டப்படும்.

விவேகாநந்தா

---

பிறஜீவப் பிராணிகளுக்கு ஹிம்ஸை செய்யாமலிருந்தால், அவனை சகல மனிதர்களும் கௌரவிக்கின்றார்களல்லவா? இதனால் லாபமேது சுவர்க்கமோ என்னவோ அதை யறியமுடியாமலிருந்தபோதிலும், உலகத்து மனிதருடைய கௌரவத்தைக்காவது ஜீவஹிம்ஸை செய்யாமலிருப்பது மேல்.

## ஆஸ்திகமதக் குறிப்புகள்.

நாஸ்திகர், அதாவது கடவுள் இல்லை யென்று சொல்பவர் உலகத்தில் ஒரு பொழுதும் இருந்ததாகத் தெரியவில்லை. இப்பொழுதும் அவர்கள் இல்லை யென்றே சொல்லவேண்டும்.

* * *

ஏனென்றால், பூமியும் அதிலுள்ள வஸ்துக்களும் கடவுளால் உண்டாக்கப்பட்டிருப்பதாக ஆஸ்திகர் கூறுகின்றனர் ஆனால் இவைகள்யாவும் "இயற்கை" யாகவே உண்டானதாக நாஸ்திகர் கூறுவர். இயற்கை என்பது யாது என்றும் அதன் குணமும் தொழிலும் யாவை என்றும் நாஸ்திகர்களை வினவுவோமாயின், அதுவே உலகத்திற்குக் காரணமென்றும், அதன் முழு விபரத்தையும் அறிவது சாமான்யரால் கூடாததாகியதென்றும் கூறுவர்.

* * *

அதாவது ஆஸ்திகருக்கு இறைவன் எப்படியோ அப்படியே நாஸ்திகருக்கு இயற்கை என்பது தோன்றுகின்றமையால், இவ்விருவருடைய கடவுளும் பெயர் மாத்திரையில் வேறுபடுகின்றது என்னலாம்.

* * *

பூவாகர்ஷணசக்தி போன்ற இயற்கை சக்திகளினுல் சூரிய சந்திரர்கள் தமது நிலையில் நிற்கின்றன என்று நாஸ்திகர் கூறுகிறார்கள்.

* * *

தேவ கட்டளையின்படி சகல சக்திகளும் தத்தம் தொழிலைச் செய்கின்றன என்பது ஆஸ்திகர்களின் அபிப்பிராயம்.

* * *

ஆகையால் நாஸ்திகன் கடவுள் இறைவன் முதலிய பதங்களை ஒப்புக்கொள்ளான் என்கிறனே யல்லாது, இயற்கை என்னும் பெரும் சக்தி இல்லை யென்று சொல்லவில்லை. அந்த சக்தியை, மனிதர்களுடைய சக்தியை யெல்லாம்விட எத்தனையோமடங்கு பலத்துடன்கூடிய சக்தியை, ஏன் வணங்கக்கூடாது?

* * *

பூலோகத்தின் ஒரு சிறுபாகமாகிய நிலப்பிரிவிற்குரியவனாகிய சக்ரவர்த்தியை நாம் வணங்கும்போது, சமுத்திரத்தில் உண்டாகும் பேரலைகளுக்கும், ஆகாயவெளியிட இடிக்கும் இடிகளுக்கும், இவைபோன்ற பிரமாதமான காரியங்களுக்கெல்லாம் காரணமாக இருக்கும் இயற்கை சக்தியை ஏன் கௌரவிக்கக் கூடாது?

* * *

நாய், நரி, புலி முதலிய துஷ்டமிருகங்களைப்போல் இருக்கப் பிரியப்படுபவர்கள் மாம்ஸ பக்ஷணம் செய்யலாம், அவ்விதம் செய்வதாக இருந்தபோதிலும் மேற்சொல்லப்பட்ட மிருகங்கள் தமது இரையைக் கத்தி முதலிய ஆயுதங்களின் உதவியில்லாமலும் சம்பாரதிரவியங்கள் சேர்க்காமலும் அடுப்பேற்றி வாட்டாமலும் தின்பதுபோல் உட்கொள்வதாயிருந்தால் தாராளமாகச் செய்யலாம்.

* * *

புலியைப்போல் பற்களாவது, நகங்களாவது மனிதர்க்கு இல்லாமையாலும், மாம்ஸத்தைப் பச்சையாகத் தின்றால் மனிதர்களுக்கு உடம்புக்காகாதாகையாலும், மனிதர்கள் மாம்ஸ பக்ஷணம் செய்யக்கூடாதென்பது நமக்கு மனித உருவத்தைக் கொடுத்துள்ள "இயற்கை சக்தி"யின், இறைவனின் கட்டளையாகு மென்று நாம் தெரிந்து கொள்ளவேண்டிய தவசியம்.

* * *

இந்தச் சக்தியை நாஸ்திகன் இயற்கை யென்று கௌரவிக்கட்டும்; இதை இறைவன் என்றுவது பிரம்மம் என்றுவது, பரிபூர்ணகத்தம் என்றுவது ஆஸ்திகர் அழைக்கட்டும்.

* * *

பிராணி ஹிம்ஸை செய்வதின் கருத்தென்னவென்று பார்ப்போமானால், தமது வயிற்றுப் பசியை நிவர்த்தித்துக் கொள்வதையும், புஷ்டியான ஆகாரமென அந்தக் கருதுவதையும் தவிர வேறெந்த நோக்கமும் இருப்பதாகவே தெரியவில்லை. புஷ்டியான ஆகாரம் சாப்பிடவேண்டுமோயினும், பசியை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டுமோயினும் மாம்ஸத்தைவிட சத்துள்ள வஸ்துக்கள் பல வுள, அவைகளில் கடலை, துவரை, உளுந்து முதலிய தானியங்களும், பால் செய் முதலிய திரவங்களுமாகும்.

## விநோதக் குறிப்புகள்.

பெரியவ ரொருவர்:—குழந்தாய், சாக பக்ஷணம் செய்பவர்களும், தண்ணீரைப் பானம் பண்ணுபவர்களுமாகிய அந்தணரைப் போல் நீ இருக்கமுடியுமானால் ரொம்பவும் கலமானது.

பையன்:—ஐயா,மிருகத்தைப்போல் புசித்தமீனைப்போல் குடிக்கும் மனிதர்களுடைய செய்கையை நான் ஒரு பொழுதும் கையாடமாட்டேன்.

* * *

வக்கீல்:—(குறுக்கு விசாரணையில் சாக்ஷிகளை கலத்த விவேகில் மஹா நிபுணர்) சண்டை நடந்த இடத்திற்கும் குற்றவாளியின் வீட்டிற்கும் எவ்வளவு தூரமிருக்கும்!

சாக்ஷி:—இருபது கஜம், இரண்டடி பதினேரங்குலம்.

வக்கீல்:—இதை எதற்காக நீங்கள் இவ்வளவு சரியானபடி கணக்கு எடுத்து வைத்திருக்கிறீர்கள்?

சாக்ஷி:—யாராவது ஒரு மடையன் அனாவசியமாக இதைக் கேட்டால் என்ன செய்கிறதென்று அளந்து வைத்துக் கொண்டேன். இதைக் கேட்ட வக்கீல் தலை குனிந்தார்.

* * *

ஒரு கிழக்கிந்திய உபாத்தியாயர் தன்னுடைய வகுப்பில் யானைப்பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் அங்கிருக்கும் பிள்ளைகளைப் பார்த்து "யானையின் தோல் கறுப்பாகவும் கெட்டியாகவும் இருக்கும். நீங்கள் யாராவது யானையின் தோலைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டார். "நான் பார்த்திருக்கிறேன் ஸார்" என்று ஒரு பையன் பலமான குரலுடன் கூவினன் "எங்கே பார்த்திருக்கிறய்" என்று உபாத்தியாயர் மறுபடியும் வினவியதற்கு, "யானையின்மேல் பார்த்திருக்கிறேன்" என்று விடை கொடுத்தான்.

* * *

காசவைத்துச் சீட்டாடிக் கொண்டிருக்கும் கடைக்காரனைப்பார்த்து அவனுடைய சிநேகிதன் ஒருவன் "உங்களுக்கு என்னலாபம்?" என்று கேட்டான். சதாதன்னுடைய வியாபாரத்திலேயே எண்ணமா இருப்பவனுகிய கடைக்காரன் "லாபமேதய்யா! சண்டை சமயமாகையால் வியாபாரம் நன்றாக நடைபெறவில்லை" என்றான். எல்லோரும் நகைத்தனர்.

* * *

தெலுங்கு தேசத்திலிருந்து ஒருஜட்ஜு தமிழ் ஜில்லாவிற்கு வந்திருந்தார். அவர் ஒரு குற்றவாளியைப் பார்த்து "நீகு வெக்கீல் உண்டாரா?" என்று வினவினர்.

குற்றவாளி:—இல்லை.

ஜட்ஜு:—வக்கீல் வேண்டி மென்றி செல்லுதிரியா?

குற்றவாளி:—எனக்கு வக்கீல் வேண்டாம். கோர்டார் சொல்லும் விஷயத்தை எனக்குத் தெளிவான தமிழில் சொல்லக்கூடிய ஒரு குமாஸ்தா இருந்தால் போதும் என்றன்.

* * *

கடன்காரன்:—ஐயா, நீர் என்னை இவ்விதம் ஜெயிலில் அடைத்திருப்பது உங்களுக்கு நியாயமா? அந்தவிஷயத்தைப்பற்றிப் பேசவே உங்களை இங்கே வரும்படியாகச் சொல்லியனுப்பினேன்.

கடன் கொடுத்தவன்:—சந்தோஷமே. நீங்கள் எப்படியாவது பணம் கொடுத்து விட்டால் சரி.

கடன்காரன்:—ஒரு யுக்தி சொல்லுகிறேன். நானோ பரம ஏழை ஒரே தடவையில் பணம் கொடுக்கும் சக்தியில்லாதவன். மாதம் கொஞ்சமாகக் கொடுத்தால் நீங்கள் பெற்றுக் கொள்கிறீர்களா?

கடன் கொடுத்தவன்:—பெற்றுக்கொள்கிறேன். (என்று சந்தோஷத்துடன் கூறினன்.)

கடன்காரன்:—அப்படியானுல் நீங்கள் என்னை இங்கே வைத்துக்கொண்டு மாதம் பத்து ரூபாய் செலவு செய்கிறீர்களே, என்னை வெளியே விட்டுவிட்டால் மாதம் ஐந்துரூபாய் எனக்குக் கொடுத்து விடுகிறேன். மிக்கயுள்ள ஐந்து ரூபாயைக் கடனுக்காக வரவு வைத்துக் கொள்ளலாமென்றன்.

* * *

புகைப்படம் பிடித்துக் கொள்ளுவதில் இஷ்டமில்லாத ஒரு ஸ்திரீ ஒரு சித்திரக்காரனைக் கூவித் தன்னுடைய உருவத்தைப் போல் எழுதும்படி கூறினள். அவன் எழுதிக்கொண்டு வரும்பொழுது தனது பெரியவாயைப் பன்முறையும் இறுக்கிக்கொண்டாள். அதற்கு அவன் "அம்மணி, நீங்கள் வாயைப்பற்றி அவ்வளவு சிரமப்படவேண்டாம். வேண்டுமானால் வாயில்லாமலே உங்களுடைய படத்தை எழுதி முடித்துவிடுகிறேன்," என்று கோபமாகவும் ஹாஸ்யமாகவும் கூறினன்.

* * *

நாகப்பட்டணத்திலுள்ள ஒரு பெரிய மனிதனின் வீட்டுக் கலியாணத்திற்குச் சென்று இருவரில் ஒருவன்:—என்ன செலவு செய்தார் அந்தப்பிரபு! அந்த ஊரிலேயே எல்லோரும் கலியாணம் ரொம்பவும் விமரிசையாகத்தான் செய்கிறார்கள். அவர்களெல்லோரும் பெருங்களைகள் (பணக்காரர்கள்) போலும்.

மற்றவன்:—நாகப்பட்டணத்தில் பெருங்களைகளுக்குத்தான் என்னகுறை பெருங்கால்களுக்குத்தான் என்னகுறை! என்று சாதுர்யமாகப் பேசினன்.



## யுத்தக் குறிப்புகள்.

### ருஷியப் பிரதான சபையில் யூதர்.

ருஷியப்பிரதான சபையில் ஒரு யூதர் முதல் முதல் உத்யோகத்தை வகித்தனர்.

### பார்லிமெண்டு மெம்பர் உயிர் துறந்தார்.

மிஸ்டர் கார்வடு கௌலி என்னும் பார்லிமெண்டு மெம்பர் யுத்தத்தில் உயிர் துறந்ததாய் லண்டன் தந்தி கூறுகின்றது.

### பதினேரு வயதுள்ள இத்தாலிய இளவரசர்.

பதினேரு வயதுள்ளவரான இத்தாலிய இளவரசர் மிகுந்த உற்சாகத்துடன் கூடிய பிள்ளைப்பட்டாளத்தைச் சேர்ந்தவராவர்.

### இரும்பால் செய்யப்பட்ட நாணயங்கள்.

நிக்கல் வெள்ளி அகப்படுவது அருமையாகப் போனமையின் பர்லினில் நிக்கிளுக்குப் பதில் இரும்பால் நாணயங்கள் செய்யப்படுகின்றன.

### பத்து லக்ஷம் பிரிட்டிஷார் பிராஞ்சுப் போர் முனையில் நிற்கின்றனர்.

பிரிட்டிஷாரில் பத்து லக்ஷ பேர் பிராஞ்சுப் போர் முனையில் நிற்பதாகவும் அடுத்த வருஷத்திற்குள் பதினைத்து லக்ஷம் அதிகமாக வரும் என்றும் எம் பீகன் என்பார் பாரிஸில் கூறினர்.

### டேன் மார்க் அரசர்.

ருஷியாவுடன் சமாதானத்தை முடிவு கட்டும்படி கெய்சர் டேன்மார்க் அரசர் மூலமாகவே சொல்லி யனுப்பினர். இந்த டேன்மார்க் அரசர் அலக்ஸாண்ட்ரியா மஹாராணியாருக்கு மருகரும், ஜெர்மென் இளவரசருக்கு மைத்துனருமாவார்.

### கம்பியில்லாத டெலிபோன்.

ஹானுலூலுவிற்கும், அமெரிக்காவிற்கும் கம்பியில்லாத டெலிபோன் அமைக்கப்பட்டிருக்கிறது. இவ்விரண்டிற்கும் உள்ள தூரம் 4600 மைல்களாகும். டெலிபோனைப் பற்றி மற்றொரு பக்கம் விரிவாக எழுதப்பட்டிருப்பதை அங்கே கண்டு கொள்ளலாம்.

### யுத்தத்தில் கோடிக்கு மேற்பட்ட நஷ்டம்.

இந்த மஹாயுத்தத்தில் சண்டையிடும் எல்லோர்க்குமாக 11,528,895 பேர் நஷ்டமென்று "பத்தொன்பதாவது நூற்றாண்டு" என்னும் பத்திரிகையின் செப்டம்பர் மீ சஞ்சிகையில் எழுதப் பட்டிருக்கும் வியாஸமொன்று அறிவிக்கிறது.

### டிராம் வண்டி யோட்டிகளாகிய பெண்பிள்ளைகள்.

பர்லினில் 4900 பேர் டிராம் வண்டி யோட்டிகள் இருக்கிறார்கள். அவர்களில் 2700 பேர் பெண்பிள்ளைகளாவர், மற்றுமுள்ள ஆண் பிள்ளைகளை கூட இராணுவத்திற்கு அனுப்ப வேண்டி இருப்பதால் டிராம் வண்டி யோட்டிகள் அனைவரும் பெண்களாக இருக்க வேண்டி மென்று இராணுவத்திலிருந்து உத்திரவு வந்திருக்கிறதாம்.

### புதிய ஜெப்ளின் விமானங்கள்.

மீனின் உருவத்தைப் போன்றதும் தாழப் பறந்த போதிலும் கண்ணுக்குப் புலப்படாததுமான ஜெப்ளின் விமானங்கள் வெள்ளோட்டம் விடப்படுகின்றன வென்றும், இவற்றின் வேகம் மற்றவைகளைவிட அதிக மென்றும், சாம்பல் நிறத்ததான விண்ணின் மீது இவற்றைப் பார்ப்பது எவர்க்கும் கூடாதென்றும் இவற்றின் வெளிப்புறம் சாம்பல் வர்ணமாயிருப்பதால் சூரியன் ஒளி பிரதிபிம்பிப்பதில்லை யென்றும் ஸ்வீஸ் பத்திரிகை கூறுகின்றது.

### மரப்பட்டைக் குழம்பிலிருந்து வெடிப் பஞ்சு.

அமெரிக்கா ரசாயன சாஸ்திரி யொருவர் பஞ்சின் விஷயத்தைப் பற்றிக் கூறுகிறார். "நம்மிடமிருந்து பஞ்சு கிடைக்கா தாகையால் விவசாய சாஸ்திரிகளாகிய ஜெர்மானியர் பஞ்சுக்குப் பதிலாக வேறெரு வஸ்து செய்யும் தொழிலைக் கைக்கொண்டிருக்கின்றார்கள். அதற்கு இடையூறுகள் பல விருந்த போதிலும் இந்த வஸ்து ஏராளமாகச் செய்யப்படுகிறது. கோனிகள் செய்யப் பிரயோஜனிமித்தம் சில புதிய இயந்திரங்களின் உதவியால் காகிதம் நூலாக நூற்கப்படுகிறது. இம்மாதிரியான கோனிகள் கனடிக்கப்படுகிறதில்லை. வெடிப் பஞ்சு செய்வதற்கோ மரப்பட்டைக் குழம்பை பற்பல ரசாயன முறைகளால் சுத்தி செய்கிறார்கள் அதனின்றும் பஞ்சு நாரைவிட மேலான நாரைத் தயார் செய்யலாம்.

## இந்திய வர்த்தமானம்.

### கராச்சியில் நல்ல மழை.

தொடர்ந்தாற் போல் மழை பெய்தமையால் கராச்சியின் கஷ்டம் கொஞ்சம் நிவர்த்தியாயிற்றென்னலாம்.

### போஸ்டாபீஸில் திருட்டு.

சென்ற பௌர்ணிமை இரவு புதுச்சேரியின் பிரஞ்சு போஸ்டாபீஸில் ரூ 371 திருடியதற்காக இரண்டு மனிதர்கள் அரஸ்டு செய்யப்பட்டிருக்கின்றனர்.

### வட மேற்கு ரயில்வே.

சென்ற வாரத்தில் 2,889 டன் கோதுமையும், 6,617 டன் கொள்ளும் விதையும் காராச்சிக்கு வட மேற்கு இருப்புப் பாதையால் கொண்டு போகப்பட்டிருக்கின்றன.

### ஹிந்து யூனிவர்ஸிடி மசோதா.

இம்மாதம் மூன்றுதேதியன்று ஹிந்து யூனிவர்ஸிடி மசோதா, இராஜப்பிரதிநிதி சட்ட சபையில் பாஸாய்விட்டது என்ற சந்தோஷசமாசாரம் எட்டுகிறது.

### சாபல் என்பார் மறுபடியும் நியமனம் பெறுகிறார்.

பம்பாய் கவர்னரின் நிர்வாகசபையில் மிஸ்டர் M. B. சாபல் என்பார் மறுபடியும் நியமனம் பெற்றிருக்கிறார். இவர் இம்மாதம் 2-உ யன்று தமது ஸ்தானத்தை வகித்தார்.

### ஹிந்து யூனிவர்ஸிடியின் நற்காலம்.

ஹிந்து யூனிவர்ஸிடி மசோதா சட்டமாக்கப்பட்ட சமயத்தில் மழைபெய்ததென்றும் அவ்விதம் பெய்தானது ஹிந்து யூனிவர்ஸிடியின் வருங்கால அதிர்ஷ்டத்தைக் குறிக்கிறதென்றும் அனுமானிக்கலாம்.

### யாட்பாலா விஷயம்.

பாட்யாலா இராஜாங்க சம்பந்தமான சகல நடவடிக்கைகளும் குருமுகியென்னும் பாஷையில் நடத்தப்பட வேண்டுமென்பதைக் குறித்து அந்த சமஸ்தானத்து உத்திரவு பிறந்திருக்கிறது. அங்கேஇப்பொழுது கையாடப்பட்டு வரும் பாஷை உருதுபாஷையாகும்.

### பப்ளிக் சர்வீஸ் கமிஷன் ரிபோர்ட்.

இந்த ரிபோர்ட்டை இந்தியா கவர்ன்மெண்டு இன்னும் பெறவில்லை. இது இப்பொழுது வெளியிடப்படாதென்பதும் வெளியிடப்படும் லக்ஷணம் மந்திரிகளின் கையில் முற்றும் விடப்பட்டிருக்கிறதென்பதும் பிரமுகர்களின் அபிப்பிராயம்.

### இராஜப்பிரதிநிதியவர்கள் பிக்கானீர் செல்வார்.

இந்திய ராஜப்பிரதிநிதியவர்கள் வருகிற நவம்பர்மீ மத்தியில் பிக்கானீர் செல்வாரென்றும், இவரைவரவேற்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடக்கின்றனவென்றும், டில்லியில் விஷயம் எட்டுகின்றது.

### ஸத்தர்ம பிரசாரிகை.

லாகூரிலிருந்து வெளிவந்துகொண்டிருந்த ஹிந்திவாரப்பத்திரிகையாகிய "ஸத்தர்மபிரசாரிகை" என்னும் பத்திரிகை சிலகாலம் நின்று போயிருந்தபோதிலும் இப்பொழுது அது மறுபடியும் பிரசுரம் செய்யப்படுகிறது. குருகுலத்திலுள்ள மஹாத்மா முன்ஷிராம் அவர்களை இது ஆசிரியராகக் கொண்டுளது.

### ஆனந்த சரண் பட்டாச்சார்ஜீ.

எவரைப் பிடித்துக் கொடுத்தால் இனும் அளிப்பதாய் விளம்பரம் செய்யப்பட்டிருந்ததோ, எவர் வெகு நாட்களாய் ஒளிந்து கொண்டு திரிகிறாரோ அவராகிய ஆனந்த சரண் பட்டாச்சார்ஜீ என்பார் சென்றமாதம் 28உ பரீத்பூர் ஜில்லாவைச்சேர்ந்த ஒரு கிராமத்தில் பிடிக்கப்பட்டார்.

### இந்திய ரயில்வே கான்பரன்ஸ்.

இந்தக் கான்பரன்ஸ் வருஷமொருமுறைகூடிப் பொதுவிஷயங்கள் பலவற்றைப் பேசி முடிவுசெய்துகொள்வது வாடிக்கை. இம்மாதிரியான கூட்டம் சுமார் ஒரு வாரம் வரையில் கூடுவதுண்டு. இக்கான்பரன்ஸ் இம்மாதம் முதந்தேதியோடு முடிவடைந்தது. இது 1916ஞு செப்டம்பர்மீ 25உ மறுபடி கூடும்.

### லக்னோ, வெள்ளத்தால் அனுதைகளானவர்கள்

வெள்ளப்பெருக்கின் காரணமாக லக்னோவில் பஞ்சம் அதிகரித்தமையால் அங்குள்ளவர்களில் 100 பேர்கள்போல் திருவாங்கூர் வந்திருப்பதாகவும், இவர்களில் பெரும்பான்மையோர் ஸ்திரீகளும் குழந்தைகளுமாவர் என்றும் திருவாங்கூரிலிருந்து திருப்பரொருவர் வரைகின்றார். இவர்கள் பிச்சை எடுப்பார்கள் போலும்; திருவாங்கூர் பழைய திருவாங்கூர் அன்றென்பதையும், ஏராளமாகச் செய்துவந்த அன்னதானம் நிறுத்தப்பட்டுப்போனதென்பதையும் இவர்கள் அறியார் என்றே எண்ணுகிறோம்.

### சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்.

சென்ற சனிக்கிழமை தினம் கூடலூரில் ஸ்தாபிதம் செய்யப்பட்டிருக்கும் இராமலிங்க பக்தஜனசபையின் அக்கத்தினரால் இராமலிங்கஸ்வாமிகள் உத்ஸவம் கொண்டாடப்பட்டது.

### இந்திய முஸ்லீம் லீக்,

வருகிற வருஷம் மார்ச்சு மாதம் வரையில் இந்திய மூஸ்லீம் கூட்டம் கூடாதென்னும் விஷயத்தை இப்பொழுதடக்கும் நடவடிக்கை கமிரிருந்து வெகைகலாமென சென்னை ஆங்கிலப் பத்திரிகை யென்று கூறுகின்றது.

### இந்தியாவிற்கு முதன்முதல் வந்த ஆங்கிலக் கனவான்.

1579 ஞுத்தில் வந்த ஆங்கிலகனவானகிய தாமஸ் ஸ்டீபென்ஸ் என்பவரே இந்தியாவில் முதல்முதல் காலை வைத்தார் என்று வெஸ்டு மினிஸ்டர் கஜட் அறிவிக்கின்றது.

### ஹிந்துப் பெண்கள் பாடசாலை பரிசளிப்பு.

பம்பாய் ஹிந்துப் பெண்கள் பாடசாலையின் பரிசளிப்புக் கூட்டத்தின்தலைமை வகித்த கனம், ஸர். P. பட்டாணியவர்கள், பெண்கள் ஞானமுடையவர்களாயிருப்பதுதான் தேசக்ஷேமத்தின் ஆரம்பமென்றும், அவர்களுடைய முன்னேற்றமே சகல முன்னேற்றத்திற்கும் முதற்காரணமென்றும் கூறினர்.

### சுயமான பால் கிடைப்பதற்குப் புதிய ஏற்பாடு.

பிரதிதினம் காலையிலும் சுயமான பால் பம்பாயில் உபயோகமாவதற்கு சௌகர்யமாக இருக்கும்படி வீரார்விலிருந்து பம்பாய்க்கு ஒரு பிரத்யேகமான வண்டித்தொடரை விசேஷமாக பம்பாய் பரோடா மத்ய இந்தியா ரயில்வேயார் உத்தேசித்திருக்கிறார்கள். இத்தொடரில் சுயமான பால்மட்டும் ஏற்றிச்செல்லப்படுமாம். இத்தொடருக்குப் பெயர் "பால்வண்டித்தொடர்" எனவழங்கும்.

### தபால் பார்ஸலில் மோசம்.

பரோடா வியாபாரி யொருவர், ரஞ்சோத் திருபுவன் என்பவரிடம் ரூ 1600 க்கு நகைகளை எடுத்துவைத்து அவைகளைத் தன்னுடைய பொருளுக்கு வி. பி. தபாலில் அனுப்பும்படி சொல்லிச் சென்றார். அவ்விதம் அனுப்பப்பட்ட கிலாட்கள் கழித்து அந்த பார்ஸல் விலாஸ தாரரால் திருப்பி யனுப்பப்பட்டது. அதை யுடைத்துப் பார்த்ததில் ஆபரணத்திற்குப் பதில் ஈயம் காணப்பட்டதாம். இதை போலீஸார் விசாரித்து வருகிறார்கள்.

### உருது பாஷையில் வெளிவரும் புதிய தினசரிப்பத்திரிகை.

"டங்கோ" என்னும் உருது தினசரிப் பத்திரிகை யொன்று கல்கத்தாவிலிருந்து புதிதாய் ஆரம்பமாயிருக்கிறது. டெய்லி டெலிக்ராப் பத்திரிகையின் ஆசிரியர் இப்பத்திரிகையின் பத்திராதிபர்களில் ஒருவராய் இருப்பதால் இது நன்றே நடத்தப்படும் என்பதற்கையமில்லை. முஸ்லீம் பிரமுகர் ஒருவருடைய சிலாக்யமான நோக்கத்தால் இப்பத்திரிகை நடத்தப்படுவதாக 'பத்ரிகா' கூறுகிறது.

### வங்காளத்து நிலக்கரிக்கு கிராக்கி.

மத்ய தரைக் கடலிலுள்ள கடற்படைகளுக்குவங்காள நிலக்கரி எவ்வளவிருந்தபோதிலும் கவர்ன்மெண்டாரால் வாங்கப்படுமென்றும், இச்சமயம் வங்காள நிலக்கரிக் கம்பெனிக்காரர்களுக்கு நற்காலமே என்றும், சூயஸ் கால்வாய்க்குக் கிழக்கேயுள்ள கப்பல்களுக்கு இந்தியா, ஆஸ்திரேலியா ஜப்பான் முதலிய தேசங்களின் நிலக்கரியைத் தவிர வேறெதையும் உபயோகிப்பதில்லை யென்று நேசதேயங்கள் தீர்மானித்திருக்கிறார்களென்று விஷயம் சிம்லாவிற் கெட்டுகிறதென்றும் தெரியவருகிறது.

### போலீஸ் வெற்றி.

ஹைதராபாத் போலீஸாரில் சிலர் சென்னைப் போலீஸாரின் உதவியால் திருவல்லிக்கேணியிலுள்ள ஒரு மார்வாடி கடையைச் சோதித்தனர் என்றும், அவர்கள் தேடிவந்த திருட்டுச் சொத்தின் ஒரு பாகம் அக்கடையில் இருந்ததென்றும், அந்த நகைகள் ஹைதராபாத் சமஸ்தானத்தில் கிலபோகா வென்பதைக் கண்ட கள்வர் சென்னை சாவகாரிடம் அவைகளை அடகுவைத்தும் பணம்வாங்கிச் சென்றனரென்றும் இன்னும் பாக்கியுள்ள நகைகளைத் தேடுகின்றார்களென்றும் விஷயங்கள் வருகின்றன.

## ஸ்ரீ சமயகுரவர்களுடைய காலம்.

சம்பந்தர் தேவாரத்திலே வேயுறு தோளிபங்கத்திலே யுள்ள "என்பொடு கொம்பொடாமை" என்னும் பாசுரத்திலே வரும் "ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டொடாறு முடனுகிய நாட்களவைதாம்" என்பதன் பொருளை நிச்சயிப்பதனுல், அவருடைய கால நிச்சயத்துக்கு ஓர் அதிப்பிராய மேற்பெறப்படும். சோதிட நூலிலே கூறப்பட்ட பிரயாணத்துக்கு ஆகாத நக்ஷத்திரங்கள் பன்னிரண்டுமே இப்பாசுரத்திலே சுட்டப்பட்டன. அவை-திருவாதிரைபரணி, கார்த்திகை, ஆயிலியம், பூரம், பூராடம், பூரட்டாதி, கேட்டை, விசாகம், சுவாதி, சித்திரை, மகம், என்னும் பன்னிரண்டுமாம். சம்பந்தர் காலத்திலே முதலாகக் கொண்டு எண்ணப்பட்ட நக்ஷத்திரம், கார்த்திகை. அயனசலனத்தினுலே தொளாயிரத் தெண்பத்தெட்டு வருஷமும் நான்கு மாசமுமாகிய காலவட்டத்தோறும் ஒவ்வொரு நக்ஷத்திரம் துருவம் பெறும். அஃதாவது, நக்ஷத்திர துருவ காலம்—தொளாயிரத் தெண்பத்தெட்டு வருஷமும் நான்கு மாசமுமா மென்க.

இங்ஙனம் துருவம்பெறும் நக்ஷத்திரமே அத்தொளாயிரத் தெண்பத்தெட்டு வருஷ காலத்துக்கும் முதல் நக்ஷத்திரமாகக் கொள்ளப்படும். சம்பந்தர் காலத்திலே துருவம்பெற்றுநின்ற நக்ஷத்திரம் கார்த்திகை. கார்த்திகை முதற் கொண்டு ஒன்பதாம் நக்ஷத்திரம் பூரம். ஒன்று கார்த்திகை ஒன்றேடேழு எட்டாம் நக்ஷத்திரம் மகம். ஏழு-ஏழாம் நக்ஷத்திரம் ஆயிலியம். பதினெட்டு-பதினெட்டாம் நக்ஷத்திரம் பூராடம். பதினெட்டொடாறு-பதினெட்டாம்நக்ஷத்திரம் முதல் ஆறும் நக்ஷத்திரம் பூரட்டாதி. உடனுயினகள் இவையொடு மற்றைய ஆறும் என்றவாறு. அது நிற்க இப்போது துருவம் பெற்றிருக்கும்நக்ஷத்திரம் உத்தரட்டாதி. கார்த்திகைக்கும் உத்தரட்டாதிக்கும் இடையேயுள்ள பரணி, அச்சுவினி, ரேவதி என்னும் மூன்றும் கடக்கப்பட்டன. ஒரு நக்ஷத்திரத்துக்குத் தொளாயிரத்தெண்பத்தெட்டு வருஷமாக மூன்றுக்கும் சென்ற வருஷத்தொகை இரண்டாயிரத்துத் தொளாயிரத்தறுபத்தாறு. சம்பந்தர் காலத்திலே கார்த்திகையிலே சென்றனபோக எஞ்சிநின்ற வருஷங்கள் ஐந்நூறாகும். இப்போது உத்தரட்டாதியில் சென்ற வருஷம் ஐந்நூற்றுக்கு மேலாயின. ஆகவே, சம்பந்தர் காலம் நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னுள்ளதாக நிச்சயிக்கப்படும்.

இனி, திருஞானசம்பந்தராலே சுரநோய் தீர்த்தருளப்பட்ட கூன்பாண்டியன் காலத்தை நிச்சயிப்பாம். கூன்பாண்டியன் முடக்கிருமாறனெனவும் படுவன். அவன் இடைச்சங்கத்திறுதியிலும் கடைச்சங்கத்துத் தொடக்கத்திலும் இருந்தவனென்பது பெறப்படும். கூன்பாண்டியன் முதல் உக்கிரப் பெருவழுதியீராகச் சென்றகாலம் ஆயிரத்துத் தொளாயிரத்தைம்பது வருஷங்களென்பது வெளிப்படை. உக்கிரப்பெருவழுதி முதல் அதுக்கால் வெல்லப்பட்ட பராக்கிரமபாண்டியனுரை நாற்பத்தொன்கு பாண்டியர் வழி வழி யரசுபுரிந்தனர். ஒரு பாண்டியனுக்கு முப்பது வருஷமாகக்கொள்ளின், நாற்பத்தைவர்க்கும் ஆயிரத்து முன்னூற்றிருபது வருஷமாகும். பராக்கிரமபாண்டியனைத் துலுக்கர் வென்று அரசு கைக்கொண்டது இற்றைக்கு எண்ணூறு வருஷங்களுக்கு முன்னரென்பது இந்திய சரித்திரத்தால் இனிது விளங்கும். இம்மூன்று தொகையும் நாலாயிரத்தெழுபதாகும். ஆகவே, கூன்பாண்டியன் காலம் நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னுள்ளதென்பது நன்றாகத் துணியப்படும். அக்காலத்திலேயே ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகளும், ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளும் இருந்தார்கள் என்பதும் தெள்ளிதிற் புலப்படுகிறது.

தஞ்சைத் தமிழ் முனிஷி
கோவிந்தசாமிபிள்ளை.

---

### மூன்று வருஷ கடுங்காவல் தண்டனை.

கவர்ன்மெண்டுப் பணத்தைக் கையாடல்செய்த இஸ்கார் ஹூஸேயின் என்னும் மெயில் சர்வீஸ் உத்யோகஸ்தன் காசி செஷன் ஜெட்ஜால் மூன்று வருஷ கடுங்காவல்தண்டனை விதிக்கப் பெற்றான். காசிக்குப்போயும் இவன் கர்மம் தொலையக்காணேம்.

வைசியமித்திரன்

1915-அக்டோபர்மீ 11உ திங்கட்கிழமை

## ஹிந்து யூனிவர்ஸிடி.

நமது தேசத்துப்பிரமுகர்கள் பலர் சில வருஷங்களாக எடுத்துக்கொண்ட காரியம் இம்மாதம் முதற்தேதி யன்று இனிது நிறைவேறிய தென்னலாம். அதாவது ஹிந்து யூனிவர்ஸிடி மசோதாவானது நம் இராஜப்பிரதிநிதியவர்கள் சபையில் இம்மாதம் 12உ யன்று சட்டமாக்கப்பட்டது என்ற சந்தோஷ சமாசாரம் நமக்கு எட்டுகின்றது. இதற்கென்று கங்கணம் கட்டிக்கொண்டு புறப்பட்ட பிரமுகர்கள் இத்துறையில் உழைத்த உழைப்பையும் அவர்களால் வசூலிக்கப்பட்ட பணத்தையும் விட, எந்தமாதிரியாக ஹிந்து யூனிவர்ஸிடி மசோதா எழுதப்பட்டால் கவர்ன்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்டு சட்டமாக்கப் படுமோ அந்த விதமாக எழுதிய பிரமுகர்களின் சாதுர்யம்கொண்டாடற்பாலது. வித்யாபிவிர்த்தியின் பொருட்டு, நாகரீக நாடுகளில் இம்மாதிரியானகாரியங்கள் ஒருமாதகாலத்தில் முடிவடையுமாயினும் வருஷக்கணக்காக இந்த விஷயம் இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்குமாக ஊசலாடியதையும், இதற்கிடையே நேர்ந்த சங்கடங்களையும் யோசித்தால், இப்பொழுது இது சட்டமாக்கப்பட்டதே நமது நற்காலமென்று கூறவேண்டும்.

இந் நற்காலத்தை குறிப்பிக்கவே லார்டு ஹார்டிஞ்ச இராஜப்பிரதிநிதியாக நமக்குக் கிடைத்திருக்கிறார். இவருடைய அந்தரங்கமான அபிமானத்தினால் மட்டும் இம்மசோதா சட்டமாக்கப்பட்டதே யொழிய, இச்சமயம் லார்டு கர்ஸான் இங்கிருந்தால்—அதாவது இந்தியராஜப்பிரதிநிதியாக இருந்திருந்தால் இது சட்டமாக்கப்படும் என்ற எண்ணத்தை நாம் கனவிலும் நினைவிற்குக் கொண்டுவருவதற்கு இடமில்லை. இம்மசோதா சட்டமாக்கப்பட்டதனால் இந்தியதேசமும், இந்தியர்களும், அடையப்போவது மஹோன்னத நிலைமையும், மேன்மையான அபிவிர்த்தியும் என்பதை நம்மவர் மறந்துவிடக்கூடாது.

உத்யோகஸ்தர்கள் ஆளுகைக் குட்படாத யூனிவர்ஸிடி ஒன்றை ஸ்தாபிதம் செய்யவேண்டு மென்பதே நம்முடைய முக்யமான எண்ணம். இவ்வெண்ணம் நிறைவேறியது. இனிமேல்வெகு சீக்கிரமாக இந்த யூனிவர்ஸிடி தன்னைத்தானே யாளும் எஜமானனாக ஆய்விடுமென்று எதிர்பார்க்கலாம்.

இராஜப்பிரதிநிதி சபையில் வித்யா இலாகா மெம்பராகிய—ஹார்கோர்ட் பட்லர்—காசியிலுள்ளவர்களாகிய ஹிந்து யூனிவர்ஸிடி சங்கத்தின் பிரதிநிதிகளைக் கண்டு சில முக்யமான விஷயங்களைப் பேசவேண்டி அங்கே இம்மாதம் 18உ போவார். வருகிற பிப்ரவரிமாதம் ஹிந்து யூனிவர்ஸிடி கட்டிடத்தின் அஸ்திவாரக்கல் நமது இராஜப்பிரதிநிதி யவர்களால் நாட்டப்படும். அச்சமயமே ஹார்டிஞ்ச பிரபுவிற்குபிரிவுபசார விருந்துகள் முதலியன நடந்தேறும் என்றும் அதற்குவேண்டிய ஏற்பாட்டைப் பொதுவாகவே காசியிலுள்ள ஜனங்களும், விசேஷமாக ஹிந்து யூனிவர்ஸிடியாரும் செய்வார்களென்றும் நாம் எதிர்பார்க்கலாம்.

ஹிந்து யூனிவர்ஸிடிக்கு நமது கவர்ன்மெண்டிலிருந்து வருஷம் லக்ஷரூபாய் கொடுப்பதென்றும் சட்டசபையில் தீர்மானம் ஆயிருக்கிறது. இந்த யூனிவர்ஸிடியின் நோக்கத்திற்கும் அந்நோக்கம் இனிது நடைபெற வேண்டியதற்கும் செலவழிக்கவேண்டிய பொருள் ஏராளமானதாக இருக்கையில் கவர்ன்மென்டார் கொடுக்கும் ஒரு லக்ஷம் பெரும் பொருளன்றாயினும், இச்சமயம் கவர்ன்மென்டாரிட மிருந்து இத்தொகை பெற்றதைப் பற்றியும் நாம் சந்தோஷமடையவேண்டுமெல்லாது சலிப்படையக்கூடாது.

சண்டை முடிந்து சமாதானம் ஏற்பட்டால் இதைப்போல் எத்தனையோ மடங்கு நமக்கு உதவிசெய்ய அவர்கள் தயாராக இருப்பார்கள் என்பதற் கையமில்லை. ஹிந்து யூனிவர்ஸிடி, வருகிற 1916ஞு ஜூன் ஜூலை மாதங்களில் வேலையைத் தொடங்குமென் றெதிர்பார்க்கலாம்.

ஹிந்து யூனிவர்ஸிடியின் விஷயம் இவ்விதம் இருக்க இந்தியாவில் கலாசாலை மாணவர்களின் சங்கியை யாதென்று பார்ப்போம். சமீபத்தில் லண்டனிலிருந்து ஒரு மேதாவி அனுப்பியுள்ள கணக்கின்படி இந்தியாவில் கலாசாலை மாணவர்கள் லக்ஷத்தில் 14.9 பேர்கள் தான் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். அதாவது லக்ஷம் ஜனங்களில் 15 கலாசாலை மாணவர்களைக்கூட காண்பது அரிதாக இருக்கின்றது. இந்தியாவில் வித்யாவிஷயம் இவ்வனம் இருப்பதால் இத்துறையில் இப்பொழுது உழைப்பது மிகவும் கொஞ்சம் என்றும், கட்டாயப் படிப்பு கவர்ன்மெண்டாராலோ அல்லது பொது ஜனங்களாலோ ஏற்படுத்தப்பட்டாலல்லாது முப்பத்தோராகோடியே சொச்சம் ஜனங்களுள்ள இந்தியாவை வித்யா விஷயத்தில் முன்னுக்குக் கொண்டுவர முடியாது. நாம் பாரத புத்ரர்களாகிய சுத்தவீரர்கள் என்பதை இப்பொழுது நடக்கும் யுத்தமுனையில் நின்று கர்ஜிப்பதுபோல், ஆச்ம ஞானிகளினுடையவும், வித்யாசாகரமாகிய மஹரிஷிகளினுடையவும் குழந்தைகள் என்பதை வித்யாவிஷயத்தில் உழைத்துக்காட்டவேண்டும். செல்வம் உள்ளவர்கள் பணத்தாலும், சாதுர்யமுடையவர்கள் தமது கூரிய அறிவினாலும், தேகபலமுடையவர்கள் தமது சக்தியாலும் இந்த யூனிவர்ஸிடிக்கு உழைப்பார்களாயின் அவசியம் நன்மையுண்டாகும் என்பதிற் சந்தேகமில்லை. யூனிவர்ஸிடியை இனிது நடத்தவேண்டியதின் நிமித்தம் இன்னும் ஏராளமான பணம் வேண்டியிருப்பதால் அதைச் சேகரிப்பதின் பொருட்டு பண்டித மதன் மோஹனமாளவியா பிரிட்டிஷ் இந்தியாவிலும், சுதேச ராஜாக்களின் இராஜ்யங்களிலும் சுற்றுப்பிரயாணம்செய்து வருவார். அப்படி அவர் வரும் சமயத்தை எவரும் மறந்துவிடாமல் தங்களாலான பொருளுதவி செய்வார்களென்றெண்ணுகிறோம். இவர் அங்கங்கே செல்லுகையில் வித்யாவிஷயத்தில் உலகத்திலுள்ள சகலதேசத்தையும்விட தாழ்மையான நிலைமையை இந்தியா அடைந்திருக்கின்றதென்பதையும், இதையும்விட இவ்விஷயத்தில்—ஏன் எல்லா விஷயத்திலும்—இந்தியாவைவிட தாழ்ந்தநிலைமையிலுள்ள வேறுதேசம் இல்லை யென்பதையும், நமது பிராசீனகால நாகரீகத்தை நிலைநிறுத்தவேண்டுமாயின் அதற்கு இதுவே சாதனமென்பதையும், அதற்குபகாரமாக இருப்பது கல்வியே என்பதையும் இவர் உபந்யாஸமூலமாகத் தெரியப்படுத்துவார் என்றே எதிர்பார்க்கிறோம்.

---

## வடநாட்டில் பஞ்சம்.

கீழ வங்காளம், அஸ்ஸாம், டர்ஹ்பிட், பீகார், லக்னோ, ஜான்பூர், பாரிஸி, கான்பூர் முதலிய இடங்களில் எந்த வெள்ள மிகுதியால் பஞ்சமானது தினே தினே விர்த்தியாகின்றதோ அந்த வெள்ளமின்மையால் பரோடா, குஜராத், கதைவார், காம்பே முதலிய இடங்களில் கால்நடைகளுக்குத் தீனியும் மனிதர்களுக்கு ஆகாரமும் அரிதாய்விட்டது. இம்மாதிரியாகவே ஒருவருக்கு ஒரு வஸ்து அதிகமிருப்பதால் உண்டாகும் கஷ்டமே இன்னொருவருக்கு அது இல்லாமையால் உண்டாகின்றது. ஐக்கியமாகாணம் வங்காளம் முதலிய இடங்களில் பெய்த மழையில் ஒரு பாகம் மேல்பக்கத்தில் பெய்திருந்தாயின் இவ்வளவு கஷ்டம் ஏற்படாது என்னலாம். ஆனால் இவைகள் யாவும் மனிதனைச் செய்துகொள்கிற விஷயங்களல்ல. மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியால் ஆளப்படுகிறோம் என்பதை இம்மாதிரியான அதிவிருஷ்டி அனாவிருஷ்டி முதலியவைகளால் நன்கு அறிந்துகொள்ளலாம். மேற்சொல்லப்பட்ட பஞ்சத்தின் நிவர்த்தியை உத்தேசித்து பரோடா மஹாராஜா முதலியவர்கள் வேண்டுமான உதவி செய்திருக்கிறார்கள். பஞ்சம் பஞ்சமென்று பற்பலர் சொல்லுவதையும் நாம் காதால்கேட்டுமட்டும் இருக்கிறோமென்பதன்றென்பதையும் சுமார் பத்துவருஷங்களுக்கு முன்னர்முதலே நாகநாட்டுப் பஞ்சம் சகஜமாகப்போயதென்பதையும் இங்கே குறிக்கவேண்டிய தவசியம்.

சுமார் பத்துவருஷத்திற்கு முன்னால் ஒரு சாமானுக்கு எவ்வளவு விலை கொடுத்தோமோ அதைப்போல் இன்னொருபங்கு இப்பொழுது கொடுக்கவேண்டியிருக்கிறது. உதாரணமாக எட்டுப்படி அரிசிக்கு ஒரு ரூபாய் கொடுத்துக்கொண்டு வந்ததுபோய் இப்பொழுது இரண்டு ரூபாய்க்குமேல் கொடுக்கும்படியும் இருக்கிறது. ஏனென்றால் சிற்சில இடங்களில் 3½படி அரிசியே ரூபாய் ஒன்றுக்குக் கிடைக்கின்றது. இவ்விதமான பஞ்ச நிவர்த்தியின் பொருட்டு கவர்ன்மென்டாரும் இரயில்வே அதிகாரிகளும் முப்பதுரூபாய்வரை சம்பளம் வாங்குகிறவர்களுக்குப் பண உதவி செய்கிறார்கள். ஆயினும் வரவர அது விர்த்தியாவதேயல்லாது நிவர்த்தியாவதைக்காணோமே? பத்துவருஷகாலமாகவே நம் தென் இந்தியா இந்த க்ஷாமத்திற்கு இலக்காய்விட்டதாகையால் இது நம்மைமொன்றும் பாதிப்பதில்லைபோல் தோன்றுகின்றது. பஞ்சமர்களைப்போன்ற தாழ்ந்த வகுப்பினர்கூட அரிசியையே உணவாகக்கொள்ளுகின்றமையானும், எவ்வளவு விலைவிற்கும்போதிலும் நம் தேசத்து நெல் பிறதேசம்போய் விற்கின்றமையானும், உணவுப்பொருட்களின் பஞ்சம் நம் பாகங்களில் நிவர்த்திக்கப்படுவதில்லை. கஷ்டமென்று சொல்லுவதெல்லாம் அது தோன்றியபொழுதுமட்டுமே என்றும் பிறகு அது வெகுநாட்களாக ஒருவனைப் பற்றிக்கொள்ளுமாயின் அவனுக்கு அது ஒரு சகஜமான காரியமாக இருக்குமல்லாது கஷ்டமாகத் தோன்றுதென்றும் கூறலாம்.

இக்காலத்தில், நாகரீகம் வாய்க்கப்பெற்றவர்களால் அரசாளப்படும் தேசங்களில் ருஷியாவும் இந்தியாவுமே இம்மாதிரியான பஞ்சத்திற்குள் ளகப்பட்டு அடிக்கடி கஷ்டப்படுகிறது. இது சாச்வதமாய் நீக்கப்படுவதற்கு வேண்டிய மார்க்கமொன்றை நம் நாட்டில் ஆளப்படுவோராவது வேண்டுகின்றார்களா? அல்லது ஆளுவோராவது அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்கிறார்களா? உள்ளபடியே இவ்விரண்டு கேள்விகளுக்கும் விடையொன்றும் தெரியவில்லை.

வருஷக்கணக்காக க்ஷாமம் வந்தகாலத்திற்கூட அரசர்கள் தம்முடைய சகல சொத்துகளையும் குடிகளுக்குக் கொடுத்துவிட்டு ஏழையாய் அஞ்ஞாதவாசம் போயிருப்பதாக நம் தேசத்துக் கதைகளாலும், சரித்திரங்களாலும் அறிந்துகொள்ளுகிறோம்.

அரசர்கள் கைசோர்ந்த பின்னும் கைசோராத பற்பல பிரபுக்களையுடையதாக நம் நாடு இருந்திருக்கிறது. ஆனால் இக்காலத்திய பிரபுக்களுடைய நோக்கமெல்லாம் தம்முடைய சுயநலங்கருதியும், தமது ஒருவருடைய முன்னேற்றம் கருதியும் மட்டும் இருக்கின்றமையாலும் தாம் உண்ணுவதற்கு முன்னர் தமது அதிதிகளைப் போஷிப்பதென்ற பரமசிரேஷ்டமான பாரத முறைமையிலிருந்து இந்தியரிற் பெரும்பான்மையோர் வழுவியமையாலும் நீங்கா தரித்திரத்திற்கு ஆளாகி வருகின்றோம்.

ஆதலால் சுவதர்மத்தை யெல்லோரும் கைக்கொள்ளுவதாலும், கல்விமான்களாக இருந்து ஐக்யத்துடன் வாழ்வதாலும், ஆத்மஞானத்தில் போதிய தேர்ச்சியுடையவர்களாக இந்திய ரனைவரும் ஆவதாலும் க்ஷாமகாலம் நீங்கி க்ஷேமகாலம் உண்டாகும்.

---

## பத்ராதிபர் குறிப்புகள்.

திருவாங்கூர் சமஸ்தானத்தில் பட்டுப்பூச்சி வளர்க்கும் தொழில் சகல தொழிலாளிகளுக்கும் கற்றுக்கொடுக்கும் விஷயத்தில் இரக்ஷண்ய சைன்யத்துடன் அந்த சமஸ்தானமும் சேர்ந்து உழைக்கின்றதென்ற விஷயம் எட்டுகின்றது. இம்மாதிரியான தொழிலின் அபிவிர்த்தியால் இந்திய இராஜாங்கம் கவனம் செலுத்துவதைக் கேட்க நாம் சந்தோஷம் அடையவேண்டியதுதான். ஆனால் பஞ்சாலை ஸ்தாபிதம் செய்வதையும், அதன் மூலமாக சகலோருக்கும் உபயோகப்படக்கூடியதும் சிறு தொகைக்கு வாங்கக்கூடியதுமாகிய வஸ்திரங்களை நெய்வதையும் நம் இந்திய அரசர்கள் கைக்கொள்வார்களாயின் தற்கால தேவையை நிவர்த்தித்த பெரும் பலனையடையாமற் போகார்.

இயலாமிகல் சங்கத்தின் சாச்வத அக்ராஸனாதிபதியாகிய அனிபெஸண்டு அம்மையாரின் 68வது ஆண்டு நிறைவுக்கொண்டாட்டம் அனேக இடங்களில் நடந்தது. மேற்கூறப்பட்ட சங்கத்தினர் இவ்வம்மையாரை ஒரு அவதாரமாகவும், தேவாம்சமாகவும் கருதுகின்றார்களாகையால், இம்மாதிரியான கொண்டாட்டங்கள் நடைபெறுவது சகஜமே.

---

"ஸர் ரபீந்திரநாத் டாகூர் அவர் காஷ்மீரத்திற்குச் செல்லுகிறார்" என்று ஆங்கிலப் பத்திரிகைகள் அறிவிக்கின்றன. இக் கவிவாணருடைய பாக்கள் சாதாரண ஜனங்களுக்கு விளங்குபவைகள் அல்ல. இவரை சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னால் இந்தியர்களின் பெரும்பான்மையோர் அறிந்திலர். ஆனால் இப்பொழுது, அதாவது நோபில் வெகுமதியை அவர் பெற்ற பிறகு—அவரை அறியாதார் இலர். இம்மாதிரியானவர்களுடைய பிரயாணம் முதலியன பத்திரிகைகளில் வருவதால் பொது ஜனங்களுக்கு யாது பயனோ தெரியவில்லை?

---

சென்ற ஞாயிற்றுக்கிழமைய தினம் கல்கத்தாவில் ஒரு பௌத்த விக்ரஹத்தைவைத்து அழகிய ஊர்வலம் விட்டார்களென்றும், அந்த விக்ரஹம் பொன்மயமானதென்றும், அது சுமார் 700 வருஷங்களுக்கு முன்னர் ஜப்பானிலிருந்து கொண்டுவரப்பட்டதென்றும் விஷயம் எட்டுகின்றது. வீண ஆடம்பரத்தில் ஆசையற்றவரும், விக்ரஹாராதனையை மறுத்தவருமாகிய பௌத்தருடைய விக்ரஹத்தை ஊர்வலம் விடுவது பௌத்தரின் கொள்கைக்கு முற்றும் விரோதமானதாகும். மதம் சீர்கேடடைவதற்கு இதுபோன்ற சிறு சம்பவங்களே ஆதாரங்களாக இருக்கின்றன. எந்த சமயத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பினும் அச்சமய குருவர் போதித்த அமிர்தமான வாக்கியத்தின்படி நடப்பதே ஒவ்வொருவருக்கும் சிரேய்ஸ்கரமாகும்.

---

இம்மாதம் 13உ மாலை சென்னை கவர்னரவர்கள் உதகமண்டலத்திலிருந்து மோட்டார் வண்டியில் புறப்படுவார். 14உ யன்று காட்டிலாகா கலாசாலையைக் கோயமுத்தூரில் திறப்பார். 15உ போத்தனூர், பொள்ளாச்சி இரயில்வே லைனைப் பொதுஜனப் போக்குவரவிற்கு திறந்துவைத்து அன்றையதினம் இரவு ஒன்பது மணிக்குச் சென்னை போய்ச் சேருவார். பிறகு நவம்பர்மீ 30உ கவர்னர் திருச்சிக்குப் புறப்படுவார். டிஸம்பர்மீ 2உ வரை அங்கே தங்கி யிருப்பார். அதன்பின்னர் 3உ முதல் 10உ வரையில் மன்னார்குடி, நாகபட்டணம், தரங்கம்பாடி, கும்பகோணம் முதலிய இடங்களில்—அதாவது தஞ்சை ஜில்லாவில் இருப்பார். கவர்னரவர்களை சகல சம்பிரமத்துடன் வரவழைப்பதற்கு, இம்மாதிரி முன்னரே தெரிவிக்கப்படுவது சௌகரியமாக இருக்கிறது. இப்பொழுது சண்டை சமயமாகையால் இந்த ஆடம்பரங்கள் நடைபெறும லிருக்கவும் ஹேதுவுண்டு.

---

இம்மாதம் முதல்தேதி யன்று சிம்லாவில் கூடிய இராஜப்பிரதிநிதி சட்டசபையில், வைஸராய் பேசிய பேச்சானது நம்மவராகிய இந்தியர் மீது பக்ஷமுடைய வார்த்தைகளாலும், நமதுமுன்னேற்றத்தையும் இராஜ விச்வாசத்தையும் குறிக்கும் சொற்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அந்தப் பேச்சில் தன்னைப் பற்றியும் கொஞ்சம் பேசினர். அதாவது, இந்தியப் பொதுஜனங்கள் இன்னுஞ் சில வருஷங்கள் வரையில் இராஜப்பிரதிநிதி ஸ்தானத்தில் தன்னையேவிட்டு வைக்கும்படி பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொண்டதற்குத் தனது மனமார்ந்த வந்தனம் செய்வதாயும், அப்படியே பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு இருக்கும்படி உத்திரவு செய்தபோதிலும் அதன் உத்திரவுப்படி நடக்கச் சித்தமாக இருப்பதாயும், இந்தியரின் இஷ்டத்திற்காவது, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் அபிப்பிராயத்திற்காவது மீறிநடக்க தனக்கு ஒருநாளும் இஷ்டமில்லை யென்பதாகவும் கூறினர். அதாவது இன்னுங் கொஞ்சநாள் இங்கிருக்கப் பிரியப்படுகிறாரே யொழிய சிலர் அபிப்பிராயப்படுவதுபோல் சீக்கிரமே தமது ஜென்மதேசம் போகும் உத்தேசமில்லை என்னலாம்.

---

அச்சுக்கூடம் வைத்திருந்தமைக்கும் ஆல்பெலா என்னும் உருதுவாரப் பத்ரிகையை நடத்துவதற்குமாக குதஹாமடின் அகமத் என்பவரை அச்சுக்கூடச் சட்டப்பிரகாரம் 2000 ரூபாய்



ஜாமீன் கட்டும்படி உத்திரவாயிருந்ததை மாற்றவேண்டுமென்று ஒரு அப்பீல் கல்கத்தா போலீஸ் கோர்டில் சென்றவாரம் வந்தது. இந்த அப்பீல் மனுதார் ஏற்கனவே 2000 ரூபாய் ஜாமீன் கட்டி பத்ரிகை நடத்திவந்ததில் அச்சுக்கூடச் சட்டப்பிரகாரம் மேற்படி ரூபாய் கவர்ன்மென்டாரால்பறிமுதல் செய்யப்பட்டது. இப்பொழுது மறுபடியும் அவர் மனுவன்னிக்கொண்டதின்பேரில் டிை ஜாமீன் அவர் கட்டவேண்டாமென்றும், அச்சுக்கூடச் சட்ட விதிவிதின்றும் நிவர்த்திக்கப்படுகிறாரென்றும் ஜட்ஜி உத்திரவு செய்தார். இந்த ஜட்ஜினுடைய நடத்தையை ஏனைய நியாயாதிபதிகளும் பின்பற்றுவார்களாயின் அச்சுக்கூட சம்பந்தமான அனேக மனத்தாங்கல்கள் நிவர்த்திக்கப்படுமென்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

---

காஷ்மீர் இராஜாங்கத்தில் கல்வி விர்த்தியம் சம்பெற்று வருகின்றது. கல்வியின் விஷயமாக காஷ்மீர் மஹாராஜா கூறுவதாவது:—

"நம் இராஜ்யத்தில் கீழ்தரக்கல்வியைச் சகலரும் கற்கும்படியான சௌகர்யம் இருக்க வேண்டுவதும், இக்கல்வியின் பயனாக நம்தேசத்துப் பையன்கள் நாகரீகமான நகரவாசிகளாகவும், சித்ரவிற்பன்ன மேதாவிகளாகவும், அறிவுமிகுந்த வியாபாரிகளாகவும், விவேகிகளான விவசாயகளாகவும், பணிவுள்ள வேலைக்காரர்களாகவும், ஆகவேண்டுவதும் என்னுடைய உண்மையான அபிப்பிராயம்."

கல்வியே மனிதனுடைய அந்தகாரத்தை நிவர்த்திக் கூடியதாகையாலும் கல்வியே ஐக்யத்தை விர்த்திசெய்யக் கூடியதாகையாலும், கல்வி விஷயத்தில் நம் இந்து அரசர்களால் காட்டப்படும் அக்கறை நமது கவர்ன்மென்டாராலும் காட்டப்படுமாயினல்லாது இந்தியாவின் அந்தகாரம் இந்த நூற்றாண்டில் அகலுவதற்கு ஆஸ்பதங்களில்லை.

---

"பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குட்பட்ட குடியேற்ற நாட்டவர்களில் 67 பேர்கள் இந்தியாவிலே நமது கவர்ன்மெண்டில் உத்யோகத்தை வகித்துவருகின்றார்கள். ஒன்று அவர்கள் எல்லோரும் இந்தியாவிட்டுச் செல்லவேண்டுமென்பதும் அல்லது இந்தியர் அவர்களுடைய குடியேற்ற நாடுகளில் தாராளமாகச் செல்லவும் அங்கேயே தங்கவும் சுதந்தரம் கொடுக்கப்பட வேண்டுமென்பதுமே பரஸ்பர ஒத்த நோக்கிற்கழகாகும். இந்தியர்களை வெறுக்கும் கர்வங்கொண்ட எத்தனையோ ஆங்கிலேயர்கள் இங்கிருக்கிறார்களென்பதை நாங்களறிவோம். ஆதலால் இம்மாதிரியான ஆங்கிலேயர்களுடைய தொகையில் அயல் நாட்டாரையும் கூட்டுவானேன். அவர்களில் அறுவர் கல்விஇலாகாவில் இருக்கிறார்கள். இவர்களுடைய சகோதரர்களாகிய குடியேற்ற நாட்டவரின் கொள்கையை யுடையவர்களாக இவர்கள் இருப்பார்களாயின், இவர்களுடைய சேர்க்கையால் இந்திய மாணவர்களுக்கு பலன் உண்டாகாதாகையால் இந்த ஸ்தானத்திற்கு இவர்கள் உரியவர்களல்லர். இருவர் மதசம்பந்தமான இலாகாவில் இருக்கிறார்கள். இவர்கள் கிறிஸ்துமதத்தின் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள்? எதைப்பற்றி உபந்யாஸம் செய்கிறார்கள்" என்று மாடன் ரெவ்யு வரைகின்றது.

---

மேற்கு வங்காளத்திலுள்ள பங்கூரா ஜில்லாவில் வாவர பஞ்சமானது அதிகரிக்கின்றதென்றறிகிறோம். இந்த ஜில்லாவில் 11,38,670 ஜனத்தொகையாகின்றது. இவர்கள் பெரும்பான்மையார் சாந்தல் போன்ற பிராசீனக்குடிகளும் பௌரீஸ்போன்ற பழைய குடிகளுமாவர். இந்தஜில்லா முழுதுமே மானுவாரியாகையால்—அதாவது மழைபெய்தாலல்லாது விவசாயம் நடைபெறுதாகையால்—மழை பெய்யாத வருஷங்களில் பஞ்சம் வந்து புகுவது இயற்கையே இந்த ஜில்லாவில் சென்ற வருஷம்கூட அறுவடை சௌகர்யமில்லை. இப்பொழுது இவர்களுடைய நன்மையை நாடுவோரும், இவர்களைக் கஷ்டத்தினின்றும் நிவர்த்திக்க எண்ணமுடையவர்களும் தம்மாலான உதவியை மிஸ்டர் ராமானந்த சத்தர்ஜீ பத்ராதிபர் "மாடன்" ரெவ்யூ கல்கத்தா என்ற விலாஸத்திற்கு அனுப்பிவைக்கலாம். உண்பதற்கு உணவில்லையே என்கிற விசாரத்தைப்போன்ற பெருத்த விசாரம் இருப்பதாகவே தெரியவில்லை? ஆதலால் இவ்விசாரத்தை நீக்குபவர் கட்டிக்கொள்ளும் புண்யம் அளவிட முடியாததாகும்.

# தந்திகள்.

### பிரிட்டிஷ் ஆகாய விமானங்கள்.

லண்டன், அக்டோபர் 4,—

ஆம்ஸ்டர் டாம்— ஜீப்ரக்கிலே இராணுவ முக்கியமான ஒரிடத்தில் ஐந்து பிரிட்டிஷ் ஆகாய விமானங்கள் பறந்து சென்று பற்பல வெடிகுண்டுகளை எறிந்தன. அச்சமயம் ஜெர்மன் துப்பாக்கிகளால் அவை சுடப்பட்டன வென்றும், சப்லெப்டினண்ட் பாயட் என்பவரால் நடத்தப்பட்ட வழி காட்டியானது தாக்கப்பட்டு நாசமாக்கப்பட்டதென்றும், பாயட் அதிக சாதுர்யமாக டச்சுப் பிராந்தியத்திற்குச் சென்றிறங்கி யிருப்பதால் அவர் பிடித்து வைக்கப்படுவரென்றும் தெரிய வருகிறது.

### ஜெர்மன் முறைகெட்ட யுத்தம்,

லண்டன் அக்டோபர் 4,—

பெட்ரோகிராட்— ஆஸ்பத்திரியை வெடிகுண்டுகளால் ஜெர்மனியர் தாக்கியதின் பயனாக மருந்துவத்தொழிலில் உதவி புரிய வந்துள்ள 46 பெண்பிள்ளைகள் உயிர் துறந்ததாக ரெட்கிராஸ் கூறுகின்றது.

### முக்யமான இடங்கள் ருஷியருடைய கையில்.

லாகூர், அக்டோபர் 4—

லண்டன், அக்டோபர் 1— ஸ்டேனிஸ்லா ரயில்வேயின் முக்கியமான இடங்கள் ருஷியருடைய கைகளில் இருக்கின்றன வென்றும் அவ்விதமான இடங்கள் அவர்களுடைய கைக்கு வந்தமையால் ஆஸ்திரியர் முன் செல்ல முடியாத நிலைமையில் இருக்கின்றன ரென்றும், டெய்லி எக்ஸ்பிரஸின் ஜெனிவா நிருபர் எழுதுகின்றார்.

### ஜெனரல் வான் கிளக்.

லாகூர் அக்டோபர் 4—

லண்டன்— ஜெனரல் வான்கிளக் பூர்ண குணமடைந்து, தமது கிராமத்திலிருந்து பர்லினிக்கு வந்து விட்டாரென்று, லெண்டரல் நியூஸின் ஆம்ஸ்டர்டாம் நிருபர் எழுதுகிறார்.

### ருஷியாவும் பல்கேரியாவும்.

லண்டன், அக்டோபர் 3—

பெட்ரோகிராட்— பல்கேரியாவிலுள்ள ஜெர்மன் உத்யோகஸ்தர்களை 24 மணி நேரத்தில் நீக்கும்படியாக பல்கேரியாவிற்கு ருஷியா யுத்தப்பிரதிக்ஞை யொன்று அனுப்பி இருக்கிறது.

### சோபியாவில் ஜெர்மன் ஆகாய விமானி.

லண்டன், அக்டோபர் 4,—

ஜெர்மனிய ஆகாய விமானிகளில் ஆறு பெயர் போல் சோபியாவில் வந்து இறங்கினார்களென்றும், கான்ஸ்டாண்டிநோபிளிலுள்ள சாதுர்யவான்களாகிய ஜெர்மன் தொழிலாளிகள் பல்கேரியாவிற்குச் செல்லுகின்றனரென்றும் ஏதன்ஸ் நகரிலிருந்து வந்த தந்தியொன்று கூறுகின்றது.

### ஜெர்மனியர் ஆரகானில் குழுமுகின்றர்.

அலகபாத் அக்டோபர் 5—

லண்டன் அக்டோபர்-4 பலமான விதமாக எதர்ப்பதின் பொருட்டு ஆரகானில் ஏராளமான ஜெர்மன் படை கூடுகின்றனவென்று விஷயம் எட்டுவதாய் ஆம்ஸ்டர்டாம் நிருபர் மார்னிங் போஸ்டுக்கு எழுதுகிறார்.

### ஜெர்மன் போர்முனையில் நாமூரிலுள்ள பீரங்கிகள்.

லாகூர் அக்டோபர் 5—

நாமூர் கோட்டைகளிலுள்ள ஏராளமான பீரங்கிகள் பலமான படைகளுடன் ஜெர்மன் யுத்தமுனைக்கு அனுப்பப்படுகின்றன வென்று "ஜெர்னல் ததிபோத்" என்னும் பத்ரிகையின் பிரஸல்ஸ் நிருபர் கூறுகிறார்.

### ஜெர்மனியர் குற்றம் சாட்டுகின்றனர்.

லாகூர் அக்டோபர் 5—

லண்டன் லக்ஷம்பர்ச்சைச் சேர்ந்ததும் தனிவுதிலே பட்டணமுமாகிய ஒரு நகரத்தை பிரான்சு ஆகாயவிமானிகள் வெடிகுண்டுகளால் தகர்த்தனரென்று பர்லினிலிருந்து உத்தியோகமுறையில் வந்துள்ள வர்த்தமானம் குற்றம் சாட்டுகின்றது.

### வில்னுவின் சமீபத்தில் ருஷியர் முன்செல்லுதல்.

லண்டன் அக்டோபர் 5—

பாரீஸ் ருஷியப் பிரதான இடத்தில் இருக்கும் M. ஹட்டின் என்பவர் கீழ்க்கண்டவாறு கூறுகின்றார்:—வில்னுவிற்குக் கிழக்கே சுமார் 20 மைல்களுக்கு மேற்பட்ட இடத்தில் ஜெனரல் ரஸ்கியின் படை முன்சென்றது. அங்கே ஜெனரல் ஹிண்டன்பர்க்கின் சைன்யம் இருந்தது. அங்கே பீரங்கிப்படையின் உதவியால் அநேகம் அரண்களும், பற்பல கைதிகளும், சாதாரண பீரங்கிகளும், மெஷீன் பீரங்கிகளும் கைப்பற்றப்பட்டமையால் இவ்வெதிர்ப்பு பயனுடன்கூடிய ஒன்றே யாகும்.

ரீகாவின் தென்மேற்கு ஜில்லாவில் ஜெனரல் வான்போலோவின் சைன்யங்களை ருஷியர் எதிர்த்து அநேக இடத்தைக் கைப்பற்றிக்கொண்டார்.

### சமாதானத்திற்குச் சரியான இடம்.

லாகூர் அக்டோபர் 5—

லண்டன்—ஸ்பெயின் தேசத்து மந்திரியார் ஸெனர் டாட்ச் என்பவர் ஸ்பெயின் தனது நடுநிலைமையை வகிப்பதோடு தனது தூதர்களை சமாதானவிஷயமாக எக்கக்ஷியாருக்கு அனுப்புவதாயிருந்தபோதிலும் சித்தமாக இருப்பதாயும், "ஸர்வதேச சமாதானம் மாட்ரிடில் இனிது நிறைவேறலாம்" என்றும் கூறியதாய் மார்னிங் போஸ்டு பத்திரிகையின் மாட்ரிட் நிருபர் அறிவிக்கிறார்.

### அமெரிக்காவின் புதிய கடற்படை.

லண்டன் அக்டோபர் 4—

வாஷிங்டன்—அமெரிக்கன் புதிய கடற்படையானது, புதிதாக செய்யப்படும் வேகமான குரூஸர் கப்பல்கள் பலவற்றையுடையதாக இருக்குமென்று கவர்ன்மெண்ட் தீர்மானம் செய்திருக்கிறது.

### ஏகாதிபத்யப் படையின் மேலதிகாரி.

லண்டன் அக்டோபர் 6—

ஸர் ஆர்ச்பால்மெர்ரே என்பார், ஏகாதிபத்யப்படைகளின் ஸர்வாதிகாரத்தை வகிப்பாரென்று தெரிகின்றது.

### ஒரு கப்பல் முழுகியது.

லண்டன் அக்டோபர் 6—

காராய்ச்சியிலிருந்து சென்ற "ஹேடீர்" என்னும் கப்பல் அமிழ்த்தப்பட்டிருக்கின்றது. அதன் விபரம் இன்னும் வரவில்லை.

### ஆஸ்திரியன் நீர்மூழ்குக் கப்பலால் அமிழ்த்தப்பட்ட கப்பல்.

லண்டன் அக்டோபர் 5—

பாரீஸ்— "பிராவின்ஷியா" என்னும் பிரான்சுக் கப்பலொன்று, கிரீக் கடற்கரைக் கப்புறம் ஆஸ்திரியன் நீர்மூழ்குக் கப்பலால் அமிழ்த்தப்பட்டது அக்கப்பலிலிருந்த வேலையாட்கள் தம்முடைய படகுகளில் ஏறிப்போகும்படி விடப்பட்டனர்.

### பிரிட்டிஷ் வெடிகுண்டுகளால் தகர்க்கப்படும் ஜெர்மன் இடம்

லண்டன், அக்டோபர் 5:—

ஆம்ஸ்டர்டாம்—வெஸ்டெண்ட், மிடில்கர்க்க முதலிய ஜெர்மன் இடங்களை நனந்தோறும் பிரிட்டிஷ் கடற்படை வெடிகுண்டுகளால் தாக்குகின்றன வென்றும், தரை பீரங்கிப்படையுடன் சேர்ந்து நடவடிக்கைகள் நடத்திய கடற்படை யொன்று காணப்பட்டதென்றும், நிலமென்று தாம் எதிர்க்கப்படுவோமென்று ஜெர்மனியர் பயப்படுகிறார்க ளென்றும் பெல்ஜியன் முகத்திலிருந்து விஷயங்கள் வருகின்றன.

### ரீகாவின் பக்கத்தில் யுத்தம்.

லண்டன், அக்டோபர் 6:—

பெட்ரோகிராட்—ரீகா ஜில்லாவிற்கு வடக்கேயுள்ள பிரிஸ்மாவிலுக்குச் சமீபத்திலிருக்கும் அரண்களை ருஷியர் கைப்பற்றியதோடு வில்னுவின் பக்கமுள்ள ஏரிப்பாகங்களின் பற்பல கிராமங்களைப் பிடித்துக்கொண்டாரென்றும், ஒரு வர்த்தமானம் கூறுகின்றது.

### காகேஷிய மலைப் பிராந்தியத்தில் துருக்கியின் தோல்வி.

லண்டன், அக்டோபர் 6:—

பெட்ரோகிராட்—துருக்கியர் முன்னுக்கு வரவேண்டுமென்று நினைத்திருந்த காகேஷியன் மலையின் வான்பிரதேசத்தில் பின்தள்ளப்பட்டனர். துருக்கியர் விரட்டியும் அடிக்கப்பட்டனர்.

### பால்டிக் கடலில் ஜெர்மன் கப்பல் அழிந்தது.

லண்டன், அக்டோபர் 5:—

ஆம்ஸ்டர்டாம்—"லியோனியா" என்னும் ஜெர்மன் ஸ்டீமர் ரூஜனிற்கு அப்புறம் பலத்தவெடியால் அமிழ்த்தப்பட்டது. அதிலுள்ள மனிதர்கள் ஸாஸனிட்ஸில் வந்து சேர்ந்தனர். அவர்களுடைய கப்பல் ஒரு பிரிட்டிஷ் நீர்முழுகுக்கப்பல் ஒன்றினால் அழிவு செய்யப்பட்டதாக அவர்கள் நிச்சயம் செய்தார்கள்.

### டாக்டர் டம்பா அமெரிக்காவிலிருந்து புறப்படுகிறார்.

லண்டன், அக்டோபர் 6:—

சௌக்யமாக ஊர் சேர்க்கப்படுவரென்ற பிரான்சு, பிரித்தானிய உறுதிமொழியுடன் டாக்டர் டம்பா டச்சுக்கப்பலில் அமெரிக்காவிலிருந்தும் புறப்பட்டு விட்டார்.

### ருஷியாவிற்கும் பல்கேரியாவிற்கும் யுத்தம் தொடருமோ?

லண்டன், அக்டோபர் 5:—

ஆம்ஸ்டர்டாம்—பல்கேரியா ருஷியாவின் கேள்விக்கு விடைகொடுக்காதென்று பர்லின் தந்திகள்யாவும் கூறுகின்றன. நேயதேசத்து மந்திரியார்கள் நேற்றே அழைக்கப்படுவர்கள் என்று எதிர்பார்த்தமையால் ருஷியா யுத்தம் தொடரும் என்பதற்கு ஹேதுவுண்டு

### பிரிட்டிஷ் மந்திரியாரின் அறிவிப்பு.

லண்டன், அக்டோபர் 6:—

பாரீஸ்—ருஷியாவின் யுத்தப்பிரதிக்ஞையைப்பற்றி சோபியாவிலிருக்கும் பிரிட்டிஷ் மந்திரியார் பிரஞ்சு மந்திரிக்கு இதே விஷயத்தை அறிவித்திருக்கிறார்.

### பீரங்கியால் விடைகொடுக்கப்பட வேண்டும்.

லண்டன், அக்டோபர் 5:—

ஆம்ஸ்டர்டாம்—டான்யூப் நதியின் மீதுள்ள ஆஸ்திரிய ஜெர்மனிய பீரங்கியின் வெடியால் ருஷியயுத்தப்பிரதிக்ஞைக்குவிடை கொடுக்கவேண்டுமென்று, பர்லின் தந்தி கூறுவதாய் "லோகலான்ஜிகர்" உரைக்கின்றது.

### பல்கேரியாவில் பிரயாணி போக்குவரவு நிறுத்தம்.

லண்டன், அக்டோபர் 5:—

பிரயாணிகளின் போக்குவரவை இராணுவ அதிகாரிகள் தடுக்கிறார்களாகையால் சண்டை எதிர்பார்க்கப் படுகிறதென்று சோபியாவிலிருந்து வந்த வர்த்தமான மொன்று கூறுகின்றது.

### பல்கேரியா இராணுவங் கூட்டுதல்.

அலஹபாத், அக்டோபர் 7:—

லண்டன்—1912ம் ஞுத்தில் தனது சைன்யங்களைப் பதனேழாவது நாளில் கூட்டிய பல்கேரியா, பழக்கமிகுதியால் இம்மாதம் 16உயன்று தனது படையைக்கூட்டுமென்று இராணுவ நிருபர் "டய்ம்ஸ்" பத்ரிகையில் குறிக்கிறார்.

### ஸலோனிகாவில் நேயத்துருப்புகள்.

லண்டன், அக்டோபர் 5:—

நேயத்துருப்புகளில் ஒரு பாகம் ஏற்கனவே ஸலோனிகாவில் வந்திறங்கி இருக்கிற விஷயத்தை ஊர்ஜிதப்படுத்துவதாய் "டிரிபியூன்" னின் ஏதன்ஸ் நிருபர் உறுதியாய்க் கூறுகிறார்.

### கிரீக் சபையில் அறிவிப்பு.

லண்டன் அக்டோபர் 5—

ஏதன்ஸ்— ஸலோனிகாவில் பிரான்சு துருப்புகள் இறங்கியுள்ள விஷயத்தையும், பல்கேரியா கிரீக்குச் செய்திருந்த வாக்குத்தத்தை நேயர் ரத்து செய்துள்ள விஷயத்தையும் எம். வென்ஸிலோஸ் கிரீக் சபையில் பேசும்போது அறிவித்துள்ளார்.

### ஜெர்மன் பத்ரிகா அபிப்பிராயம்.

லண்டன், அக்டோபர் 5—

நேயர்கள் 150,000 பேர்களை ஸலோனிகாவில் சேர்த்திருக்கிறார்கள். இச்சம்பவத்தை எம். வென்ஸிலோஸ் தடுத்தாராயினும் இச்செய்கை ஒரு நடிப்புப் பேர்லாகும். இவ்வாறு துருப்புகளை இறக்கியதால கிரீஸ் ஸர்வியாவின் நிலைக்கு அபாயம் வருமோ வென்று ஏதன்ஸில் பயங்கொண்டார் களாயினும், ஸர் எட்வார்ட் கிரேயின் பேச்சு வெளியிடப்பட்டமையால் அந்த பயம் நிவர்த்தியானது.

இனிமேல் நேயர் பல்கேரியாவிற்கு எவ்விதமான சௌகர்யமும் செய்யத் தயாராக இரார என்றும், நேயருக்கு ஏராளமான படை இருக்கிறதென்றும், ஆனால் இரண்டு வகுப்புகளை கிரீக் முன்னிலையிலும், மூன்று வகுப்புகளை செர்வியாவின் முன்னிலையிலும் அனுப்ப வேண்டிய சங்கடமான வேலையில் பல்கேரியா அமர்ந்திருக்கிற தென்றும், கிரீக் பத்ரிகை கூறுகின்றது.

### "ஹெஸ்பிரேயன்" அமிழ்ந்த விஷயம்.

லண்டன், அக்டோபர் 4—

வாஷிங்டன்—ஹெஸ்பிரேயனில் கண்டெடுக்கப் பட்ட உலோகத்தைப் பரிசைசெய்த கடற்படை உத்யோகஸ்தர்கள் அக்கப்பல் தாங்கத்தில் தட்டியே உடைந்திருக்கின்றதென்று, ஏகோபித்த அபிப்பிராயத்தைக் கூறி இருக்கின்றார்கள்.

---

### இரங்கோன் நகர வைசிய மாணவர் தமிழ்ச்சங்கம்.

இச்சங்கத்தின் மூன்றாமுறைக் கூட்டம் 27-9-15 மாலை 4-மணிக்கு கூடியது. அஞ்ஞான்று சபையார் விருப்பத்தின் படி ஸ்ரீமான் S. R A. M. பழனியப்பசெட்டியாரவர்கள் அக்கிராசனம் வகித்து முகவுரை கூறியபின்னர், முறையே ப்ரமஸ்ரீ R. Y. இராஜாராம் சாஸ்திரியா ரவர்கள் கல்வியென்ற விஷயத்தையும், பாடசாலை மாணவருள் T. S. அருணசலம் உருத்திராக்ஷ மகிமை என்பதையும், Y. வெங்கிடாசலம் அறத்தின் மேம்பாடு என்பதையும் R. M. மெய்யப்பன் கம்பர்சரித்திர விளக்கம் என்பதையும், S. சிதம்பரம், A. நடேசன் விக்கிரகாராதனை என்பதை சம்வாத மாகவும், பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் மகா-௱-௱-ஸ்ரீ Y. இராமச்சந்திரராவுத்து அவர்கள் ஸ்ரீமத் கம்பராமாயணம் பாலகாண்டம் வரைக் காக்ஷிப் படலம் 21-வது செய்யுள் 'மும்மை புரிவன் கவிது' என்ற பாட்டின் சிலேடையைப் பற்றியும் தம் அறிவிற் கெட்டியவாறு சபையார் குதூகலிக்கும் வண்ணம் பிரசங்கித்தார்கள்.

சபாநாயகரவர்கள் ஒவ்வொரு பிரசங்கத்தின் சாராம்சங்களையும் எடுத்துக்காட்டி தம் நுண்ணறிவிற் பொதிந்துள நல்லுரை பலவற்றையும் நன்குணர்த்தியதோடு இச்சங்கம் நீடூழிவாழும் வண்ணம் தாம் சர்வேசுரனைப் பிரார்த்தப்பதாகவும் சங்கம் கூடுங்காலம் ஏனையோரும் வந்து சிரவணஞ்செய்த முறுதல் நலமென்றும் கூறினார்கள். பின் வந்தனோபசாரம் கூறவும், கடவுள் வாழ்த்துக் கூறவும் சந்தன தாம்பூலம் வழங்கவும் சபை மங்களமாக நிறைவேறியது சுபம்! சுபம்!! சுபம்!!!

அ—வ

## டெலிபோன். (Telephone.)

டெலிபோன் அல்லது பேசும் இயந்திரம் என்று கூறப்படும் இயந்திரத்திற்கு ஒலிகாட்டிக்கருவி யென்றும் ஒரு பெயருண்டு. காம்பஸ் என்னும் யந்திரத்தினால் நாம் திசையை அறிந்து கொள்ளுகிறோம்; அதனால் அதற்குத் திசையறிகருவி என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்படியே தூரத்திலிருந்து பேசப்படும் வார்த்தைகளை நாம் கேட்கும்படியாகச் செய்வதால் அதற்கு ஒலிகாட்டிக் கருவி என்று நாம் கூறுவோமாயின் அது வெகு சிலருக்கன்றி மற்றவர்களுக்கு நன்கு தெரியாது. ஆதலால் அதற்கு டெலிபோன் என்ற ஆங்கிலப் பெயரையே நாம் கொடுத்து மேலே சொல்லுவோம்.

இது பெல் என்பவரால் முதன்முதல் இயற்றப்பட்ட கருவியாகும். வெகு தூரத்திலிருந்து பேசப்படும் வார்த்தைகளைக் கேட்பதற்கு உபகாரமாக இருக்கும் இக் கருவியானது மின்சார சக்தியின் உதவியால் இயங்குகின்றது. இதைப் புதிதாக ஒருவர் படிப்பாராயின் அவருடைய அதிசயம் பிரமாதமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இம்மாதிரியாக ஒரு பக்கத்திலிருந்து பேசப்படும் வார்த்தையானது மற்றொரு பக்கத்திற்கு எப்படி மின்சார சக்தியால் கொண்டுபோகப் படுகின்றதென்கிறீர்களா? ஒரு வீட்டிலுள்ள இரண்டு கம்பங்களில் ஒரு கம்பியைப் பலமாகக் கட்டி நடுவிலுள்ள கம்பியைத் தட்டுவார்களாயின் "ஙொய்" என்ற ஒரு அதிர்ச்சியானது உண்டாகின்றது. அங்கிருந்து உண்டாக்கப்படும் அதிர்ச்சி நமது வீட்டிலுள்ள ஆகாயத்தின் வழியாக வந்து நம்முடைய காதுகளில் தாக்குகின்றது. இம்மாதிரியான அதிர்ச்சி வீணை தம்புரா, பிடில் முதலியவைகளிலிருந்து வருவதை நாம் கேட்டிருக்கிறோமல்லவா? இச் சங்கீதக் கருவிகளை யெல்லாம் விட மேலான சங்கீதக் கருவி யொன்றைக் கடவுள் ஒவ்வொருவருக்கும் கொடுத்திருக்கிறார். அதாவது மனிதர்களுடைய வாக்கு. மற்றச் சங்கீதக்கருவிகள் எப்படி அதிர்ச்சியினால் இன்னோசையை வெளியிடுகிறதோ அப்படியே நமது வாக்கும் அதிர்ச்சியினாலே சத்தத்தை உண்டாக்குகின்றது. வீணை முதலிய இசைக்கருவிகளுள் சத்தத்தை யுண்டாக்கும் கம்பியைப் போல் நமது வாக்கில் ஒன்றுமில்லையாயினும் சுவாசக் குழாய்க்குள் நன்றாய் இறுக்கிக் கட்டப்பட்ட தந்திக் கம்பிபோன்ற ஒருவிதக் கருவியுண்டு. நாம் பேசவேண்டுமென்று முயலும்போது நம்முள்ளிருந்தெழுகின்ற வாயுவினால் அந்தக் கருவி யசைகின்றது அதனால் நமது வாக்கினின்றும் ஒலி உண்டாகின்றது. பிறகு உதடு அண்ணம் நாக்கு முதலிய கருவிகளால் மேலே சொல்லப்பட்ட ஒலி வெவ்வேறு எழுத்துவடிவமாக வெளிப்படுகின்றது. அந்த ஒலி ஆகாயத்தில் படுகின்றது. அப்பொழுது ஆகாயத்தில் சலனம் ஏற்படுகிறது. அச்சமயத்தில் நமது காதுகளுள் இருக்கும் ஆகாயமும் அசைகிறது. அங்கிருக்கும் டின்பனம் என்னும் ஜவ்வானது மெதுவாகச் சலிக்கிறது. அப்பொழுதுதான் நம் சத்தங்களைக் கேட்கிறோம். இவ்விதம் இறைவன் சிருஷ்டி செய்திருப்பதையே கண்டுபிடித்து டெலிபோன் என்னும் கருவியைக் கண்டு பிடித்தனர்.

டெலிபோன் என்னும் யந்திரத்தைப் பற்றிப் பேசுவதற்கு முன்னால் சிறு பிள்ளைகள் தெருக்களில் விளையாட வைத்திருக்கும் ஒரு விளையாட்டுக் கருவியைப் பற்றிக் கொஞ்சம் பேசுவோம். நீளமான நூலையாவது சித்திக் கொடியையாவது எடுத்து அதன் இரண்டு நுனிகளிலும் நெருப்புப் பெட்டியையாவது தென்னங் கொட்டாங்கச்சியையாவது முடித்து, மெல்லிய கடிதத்தையாவது ஆட்டுக் ஜவ்வு என்னும் மெல்லிய தோலையாவது போட்டு நெருப்புப் பெட்டியினுடையவும், கொட்டாங்கச்சியினுடையவும் ஒரு பக்கத்தை ஒட்டிவிடுவார்கள். மற்றொருபக்கம் திறந்திருக்கும். திறந்திருக்கும் வழியாகவே பிள்ளைகள் பேசுவார்கள். மேலேசொன்ன மாதிரியாக ஒரு விளையாட்டு யந்திரத்தைத் தயார்செய்து கொண்டு இரண்டு சிறு பிள்ளைகளும் ஒவ்வொரு நுனியைக் கையிலெடுத்துக் கொண்டு தெருவில் செல்லுவார்கள். பிறகு நூலையோ சித்திக் கொடியையோ கொஞ்சம் இழுத்துப் பிடித்துக்கொண்டு பேச ஆரம்பிப்பார்கள். ஒருவன் தன்னிடத்திலுள்ள நெருப்புப்பெட்டியையோ கொட்டாங்கச்சியையோ காதில் வைத்துக்கொண்டு மற்றவன் பேசப்போகும் வார்த்தையைக் கேட்பதற்குத் தயாராக இருப்பான். மற்றவன் தன்னண்டையில் இருக்கும் நெருப்புப்பெட்டியிலோ கொட்டாங்கச்சியிலோ பேசுவான். அவன் அவ்விதம் பேசும் வார்த்தையானது அவனுடைய நண்பனின் காதில் நன்றாகக் கேட்கும். பேசுகிறவன் எவ்வளவு மெதுவாகப் பேசியபோதிலும், அவனுடைய பக்கத்திலிருப்பவனுக்குக் கூட கேட்காமல் பேசிய போதிலும், மற்றப் பக்கத்தில் அதாவது நூலின் மற்றொரு நுனியில் இருக்கும் சிறுவனின் காதில் நன்றாகக் கேட்கும். இது எப்படிக் கேட்கின்றதென்று பார்ப்போம்.

சிறுவன் பேசும்பொழுது அவனுடைய கண்டத்திலிருக்கும் நாளம் ஆட, உடனே அவன் வாயண்டையிலுள்ள மெல்லிய காகிதமோ தோலோ நடுங்குகின்றது. அது நடுங்கியுடன் அதன் மத்தியிலிருந்து போகும் நூலானது நடுங்க, அது இழுத்துப் பிடிக்கப்பட்டிருப்பதினால் மற்றப் பக்கத்திலிருக்கும் நெருப்புப் பெட்டியிலுள்ள காகிதம் நடுங்கும். அப்பொழுது அதைக் காதில் வைத்துக் கொண்டிருப்பவனுடைய காதிலுள்ள ஆகாயம் அசைந்து பேச்சைத் தெரியும்படி செய்கிறது. இம்மாதிரியான கருவியின் உதவியால் சுமார் நூறு சஜ நீளம் வரையில் மட்டும் பேசலாம். ஆனால் காந்த சக்தியால் ஐந்நூறு மைல்களுக்கு அப்பாலிருக்கும் ஒருவருடன் நேரே நின்று பேசுவதுபோல் பேசலாம். அது எப்படி என்பதைக் கீழே கூறுவோம்.

ஒருவர் பேசுவது அவரைப்போல் தூரத்திலுள்ளவர்களுக்கு மட்டுமே கேட்கும். வேறொருவர் பேசுவது அநேகமாய் சாதாரணமாகக் கேட்கும். இவர் இரண்டு பெயர்களுக்கும் வித்தியாசம் என்னவென்று பாருங்கள். இதைவிட இன்னொரு சாதாரண உதாரணத்தைச் சொல்லுகிறோம். நாம் அநேகமுறை நாடகத்திற்குச் சென்றிருக்கிறோம். சில ஆக்டர்கள் பேசுவது தரையில் இருப்பவர்களுக்கு நன்றாகக் கேட்கிறது. வேறு சில ஆக்டர்கள் பேசுவது தரையில் இருப்பவர்களுக்குக் கொஞ்சமும் கேட்பதில்லை. இதற்குக் காரணம் என்ன? முதலில் பேசியவருடைய வாக்கிலிருந்து வரும் சத்தமானது தரையில் இருப்பவர்களுடைய காதின் ஜவ்வை அசைக்கும் சக்தி வாய்க்கப் பெற்றதாக இருக்கிறது. அதனால் அவருடைய பேச்சு அவர்களுக்குக் கேட்கிறது. மற்றவருடைய பேச்சோ முன்னவருடைய பேச்சை விட பலம் குன்றியதாக இருப்பதால் அது தரையில் இருப்பவர்களுடைய காதின் ஜவ்வை அசைப்பதற்குப் போதிய சக்தியுடன் கூடியதாக இல்லை. ஆதலால் இரண்டாவது பேசியவருடைய பேச்சு தரையில் உட்கார்ந்திருக்கும் ஜனங்களுக்குக் கேட்பதில்லை. அதாவது இதிலிருந்து நாம் என்ன தெரிந்துகொள்ளுகிறோமென்றால், ஒருவருடைய பேச்சானது வெகு தூரத்திற்கு அப்பாலிருக்கும் மனிதர்களுடைய காதிலுள்ள கருவியை அசைக்க வேண்டுமானால் அது பலத்துடன் கூடியதாக இருக்கவேண்டும் என்பதையே தெரிந்துகொள்ளுகிறோம்.

இருநூறு அல்லது மூன்னூறு மைல்களுக்கு அப்பாலுள்ள ஒருவருடன் நாம் டெலிபோனில் பேசவேண்டுமானால் நம்முடைய சத்தமானது எவ்வளவோ நூறு மடங்கு பலமாகப் பேசப்படவேண்டும். அவ்வளவு பலமாகப் பேசுதல் நம்மாலான காரியமன்று. ஆகலான் அதற்கு ஒரு புதுவழியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அது எப்படியெனில் நாம் டெலிபோனில் பேசும் வார்த்தையானது, அதாவது டெலிபோனில் நாம் செய்யும் அதிர்ச்சியானது காந்தத்தின் உதவியால் ஆயிரம் இரண்டாயிரம் பங்கு அதிகமான பலத்துடன் கூடியதாக வெளிப்பட்டு மற்றொரு பக்கத்திலிருக்கும் யந்திரத்திற்கும் போய்க் கேட்கிறது. மின்சார சக்தியானது இண்டக்ஷன் காயில் (Induction Coil) என்னும் கம்பிச் சுருளின் வழியாகச் செலுத்தப்படுமானால் அநேக நூறு பங்கு அதிகமான பலத்துடன் கூடியதாக வெளிவரும். அம்மாதிரியான கம்பிச் சுருளே டெலிபோன் யந்திரத்தில் முக்கியமானது.

நாம் பேசும் வார்த்தையானது டெலிபோன் மூலியமாகச் சென்று மற்றொரு பக்கத்திற்கு யாங்ஙனம் கேட்கிறதென்று பார்ப்போம். ஒவ்வொரு டெலிபோன் இயந்திரத்திலும் நாம் பேசுவதற்கு ஒரு குழாயும், பிறர் பேசுவதை நாம் கேட்பதற்கு மற்றொரு குழாயுமாக இரண்டு குழாய்கள் இருக்கின்றன. நாம் செய்கின்ற சத்தமானது பேசுங் குழாயில் படுகிறது. பட்டவுடன் அந்த அதிர்ச்சியானது காந்தசக்தியால் இழுக்கப்பட்டு இண்டக்ஷன் காயில் என்னும் கம்பிச் சுருளின் நுனியில் சாதாரண பலத்துடன் சென்று அந்தச் சுருளினின்றும் மற்றொரு நுனியின் வழியே வெளியில் செல்லும்பொழுது அநேகம் பங்கு அதிகமான புதிய பலத்துடன் செல்லுகிறது. அம்மாதிரியாக அதிகமான பலத்துடன் வெளிவரும் அதிர்ச்சியானது வெளிகளிலே கம்பங்களின் மீது செல்லும் கம்பிகளின் வழியாகப் போய் மற்றப் பக்கத்திலுள்ள ஆபீசின் டெலிபோனினுடைய கேட்கும் குழாயில் சென்று காந்தத் தகட்டை யசைக்கிறது. அப்பொழுது அங்கிருப்பவர் நாம் சொல்லியதை அறிகிறார். இவ்விதமாகவே அவர் பேசுவதும், அவருடைய டெலிபோனிலுள்ள இண்டக்ஷன் காயில் என்னும் கம்பிச் சுருள் வழியாக வரும் அதிர்ச்சி நம்மிடத்திலுள்ள கேட்கும் குழாயில் வந்து சேருகிறது. அப்பொழுது அவர் பேசுவதை நாம் தெரிந்து கொள்ளுகிறோம். எவ்வளவுக் கெவ்வளவு ஒரு டெலிபோனானது அதிகமான தூரம் பேசவேண்டுமோ அவ்வளவுக் கவ்வளவு அதனுடைய காந்த சக்தியும் இண்டக்ஷன் காயிலும் பலமுள்ளவையாக இருக்கவேண்டும்.

## சாக்கடையிலிருந்து எடுக்கப்படும் கொழுப்பு.

ஜெர்மன் பட்டணங்களிலுள்ள சாக்கடைகளிலிருந்து இரசாயன முறைப்படி ஒருகோடியே நாற்பது லக்ஷம் டாலர் மதிப்புள்ள கொழுப்பு எடுக்கப்படலா மென்று, டாக்டர். H பாச்கோல்ட் என்பவர் அபிப்பிராயப் படுகிறார். இக் கொழுப்பிலிருந்து எடுக்கப்படும் சாரம் மெழுகுவர்த்தி, சோப் முதலியவைகள் செய்வதற்குபயோக மாகின்றதென்றும், அவ்விதம் உபயோகமானது போக மீதியுள்ள சக்கையில் நாலுக் கொரு பாகம் நிலக்கரியைச் சேர்த்தால் நல்ல எரிகரும்பாகின்றதென்றும் தெரியவருகிறது. மேலும் இந்தக் கொழுப்பின் சக்கையில் நூற்றுக்கு ஐந்து பாகத்திற்கு மேல் உப்பு வாயு சம்பந்தப்பட்டிருப்பதால் இதை நிலத்திற்கு மேன்மையான எருவாக உபயோகிக்கலாம். இச் சக்கை தண்ணீர் குட்டைகளில் போடப்பட்டால் மீனுக்கு உபயோகமாக இருக்குமென்று, மியூனிச்சிலுள்ள டாக்டர். ஹோபர் புதிதாகக் கண்டு பிடித்திருக்கிறார்.

## கர்மத்துக்குத் தகுந்தஜென்மம்.

முன்காலத்தில் நமது தேசத்தில் பகவான் அவதாரமாகிய ரிஷபர் என்றொரு சிறந்த அரசர் இருந்தார் இவருக்கு அநேகம் பிள்ளைகள் இருந்தனர் அவர்களுள் மூத்தவன் பெயர் பரதர் இப்பரதர் ராஜ்ஜியம் ஆண்டுவந்த சிறப்பால் நாம் இப்பொழுது வசிக்கும் தேசங்களுக்கு பரதகண்டமென்று பெயர் இப்பவும் வழங்கிவருகிறது.

இவருக்கு முதிர்ந்த வயது வந்ததும் பக்தி வைராக்கியம் உண்டாகி

தாயையும் தந்தையையுந் தற்சார்ந்த கேளிரையு, மாயமயல்காட்டுமனைவியையுஞ்— சீயென்று, சொற்பனம்போற் கண்டெட்டாத தூரப்போ யோகமில்ல, கற்பவனே ஞானியென நேர்.

என்ற பாட்டுக்கு ஏற்ப நாடு முதலியவைகளை எல்லாந் துறந்து காடுசென்று இவர் தவம்செய்பலாயினர் அப்படியிருக்கையில் ஒருநாள் தபசு முடிந்து பக்கத்திலிருந்த ஆற்றுக்கு வந்தார் அதுசமயம் ஒருமான்குட்டி அனாதையாக ஆற்றோடு போவதைக்கண்டு அதன்பேரில் கருணை கூர்ந்து அதைத் தண்ணீரிலிருந்து எடுத்து தனது ஆசிரமத்துக்குக் கொண்டு போனார். ராஜ்யம் பெண்டுபிள்ளைகளைத் துறந்த ஞானிக்கில்லை இன்பமும் துன்பமும் என்றிருக்கவேண்டியதை மறந்து பகவத்யானம் செய்யவந்த பரதருக்கு அந்த மானின்பேரில் அபிமானம் உண்டாகச் சற்று அசாக்கிரதையாய் அதை வளரவிட்டுவிட்டார் கால்முளைத்துக் கிடைன் உண்டானமான் தன் சுவபாவப்படி காட்டில் சென்று ஸஞ்சரிக்கத்தொடங்க ஒருநாள் அது காணாமல் போயிற்று பரதருக்கு அன்றுமுதல் ஏக்கம்பிடித்து விட்டது. அவர் தன் உயிர் மாறும்பொழுதும் மான் ஞாபகம் அவரைவிட்டு அகலவில்லை.

ஆசையாலித்தமாயை யரிவினை முழுதுமூடித், தேகமே யான்மாவென்றுஞ் சேயிழை மடவார்தங்கள், போகமே மோகமென்னும் புத்தியைத் தரிவுபண்ணுஞ், சோகம் பாவனையாலித்தைத் தொலைப்பார்கள் ஜீவன் முக்தர்;

என்றபடி அடுத்தஜென்மத்தில் பரதர் மானாய்ப்பிறந்தார். இப்படிப்பிறந்தும் பூர்வஜென்மத்தில் நல்லவழிகளில் மனப்பூர்வமாய்ப் பழகியிருந்ததால்,

வேம்புறு புழுவைவாங்கிமேன் கரும்பிடைவிட்டாலும், வேம்பையே நோக்கிப் பின்னும் வியப்புறாதபோலச், சோம்பு மூன்றவத்தை நீக்கித் துரியத்தில் வைத்த போதுஞ், சோம்புமூன்ற வத்தைதன்னைத் தோயவே நினைக்குஞ் ஜீவன்,

என்றபடி, விட்ட குறைவந்து தொட்டுக்கொள்ள பூர்வஜென்ம ஞாபகம் அந்த மானுக்கு இருந்தது.

அபிமானத்தை வளரவிட்டதால் தனக்கு இக்கதி வந்தது என்பதை உணர்ந்த இந்த மான் மற்றைய மான்களுடன்சேர்ந்து தனது அபிமானத்தை வளரவிடாது ஒதுங்கி தான் முன் ஜென்மத்தில் தவம் செய்துகொண்டிருந்த காட்டிற்கே போய் பகவானைப் பக்தி செய்துகொண்டு தனிமையாக இருந்துகொண்டு,

எத்தனை தாயைக்கண்டோம் எத்தனை தமரைக்கண்டோம், எத்தனை மனையைக்கண்டோம் மெத்தனை மகனைக்கண்டோம், மெத்தனை யூரைக்கண்டோம் மெத்தனை பேரைக் கண்டோஞ், சித்தமே திரும்பா ஈசன் திருவடிக் காணு மாதே.

என்று பகவானை ஸ்மரித்துக்கொண்டிருந்தது

இவ்வாறு ஸத்காலக்ஷேபம் செய்து கொண்டு மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த மானுக்கு முடிவு காலம் வர அடுத்த ஜென்மத்தில் ஒரு பிராஹ்மணனுக்குக் கடைசி புத்திரனாகப் பிறந்து எளிதில் மோக்ஷம் பெற்றது.

ஒருவன் சாகுங்கால் அவன் பக்தி, தானம், தவத்துக்குத்தக்கபடி மனதில் இருக்கும் கடைசியான எண்ணமே அடுத்த ஜென்மம் இன்னதென்பதைக் குறிப்பிக்கிறது. அது எப்படிப்பட்டதாயிருந்தபோதிலும் முன்ஜென்மத்தில் செய்த பாப புண்ணியத்துக்குத்தக்க கர்மங்கள் பயன்படாமற் போகவேமாட்டாது.

### ஆத்மா அழிவற்றது.

முன்காலத்தில் கௌதமர் என்ற ஒரு மஹாரிஷி இருந்தார். அவருக்கு நாசிகேதஸ் என்று ஒரு பிள்ளை இருந்தான். அவன் ஒரு யாகஸமயத்தில் தன் தகப்பனார் நல்ல வஸ்துக்களைத் தானம் கொடுக்காது ஸாதாரணமானவைகளையே கொடுத்துவருவதைக்கண்டு நாசிகேதஸ் பிதா என்னை யாருக்குத் தானமாகக் கொடுக்கிறீர் என்று கேட்டான். யமதர்மராஜா நாஸிகேதஸ்ஸை வேறொருவரால் கேட்டுக்கொள்ளும்படி எவ்வளவு மன்றாடியும் பயன்படாமற் போய் விட்டது. நாஸிகேதஸ் சிறந்த அறிவும் நல்ல ஒழுக்கமும் உடையவனாக இருந்ததால் யமன் சுபவாக்யங்களைக் கேட்டு ஏமாறாது தான் கேட்ட விஷயமே தனக்கு அவச்யம் தெரியவேண்டும் என்று உறுதியாக இருந்துவிட்டான். அப்பொழுது யமதர்மன் அரிய விஷயங்களை எல்லாம் போதித்து விட்டு "மூச்சுகளால்" மாத்திரம் மனிதன் உயிருடன் இருப்பதில்லை. இவைகளுக்கு அப்பாற்பட்ட ஒரு வஸ்துவால்தான் இவைகள் நிற்கின்றன.

தான் தானம் கொடுக்கும் மாதிரியைத் தன் மகன் அறிந்துவிட்டான் என்று கோபங்கொண்டு உன்னை யமனுக்குக் கொடுத்தேன் என்று கூறினான். உடனே நாஸிகேதஸ் தன் தகப்பன் சொற்படி யமபட்டணம் சென்று ஸ்தோத்திரம்செய்து காத்திருந்து அவனிடம் மூன்று வரங்களைப்பெற்று 1 இறந்தபின்பு ஒருவன் ஆத்மா இருக்கின்றது என்பர் சிலர், 2 ஆத்மாவும் இறந்துவிடுகின்றது என்பர் சிலர், 3 இவைகளுள் உண்மை எது? என்பதை மூன்றாவது கேள்வியாகக் கேட்டான்.

வரும், ஸவாமி.

## விளம்பரம்.

தென் இந்தியா மல் யுத்தப் பயிற்சி சபையார் தாங்கள் சென்னைப்பட்டணத்தில் கிறிஸ்து ஜனனப் பண்டிகை கொண்டாடும் வாரத்தில் தாங்கள் வழக்கப்படி செய்யும் வேடிக்கைகள், காட்சிகள் இவைகளின் நிர்வாகத்தினால் வரும் லாபத்தை சென்னபட்டணம் யுத்த நிதிக்காகக் கொடுத்துவிட தயவுசெய்து சம்மதித்திருக்கிறார்கள். 1915-ம் வருஷம் டிசம்பர் மாதம் 27-ம் தேதி திங்கட்கிழமை யன்று ஆரம்பித்து ஒரு வாரத்திற்கு வழக்கமாயுள்ள மல் யுத்த சம்பந்தமான வேடிக்கைகளும் நடத்தப்படும். வியாபார சங்கங்கள் வழக்கமாய் அனுப்பும் காட்சி சாமான்களும் இன்னும் யுத்தமாய்த் தோன்றும் ஏதாவது புதுமைகள் சகிதம் காட்சிசெய்யப்படும். இதுவும் தவிர இடம் சௌகரியப்படுகிற மட்டிலும், தென் இந்தியா இந்த ராஜதானி இவைகளிலிருந்து வரும் நிர்மித வஸ்துக்களும் கைத்தொழில் சாமான்களும் கீழே விவரித்திருக்கிற ஏழு பிரிவுகள் சகிதம் காட்சி செய்யப்படும்:—

1. சென்னபட்டணம் விவசாய டிபார்ட்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட விவசாய பிரிவு.
2. காட்டிலாகாதாரால்ஏற்படுத்தப்பட்ட காட்டுசாமான்களடங்கிய பிரிவு
3. சலாப இலாகாதாரால் ஏற்படுத்தப்பட்ட சலாப சாமான்கள் உள்ள பிரிவு.
4. கைத்தொழில் இலாகாதாரால் ஏற்படுத்தப்பட்ட பிரிவு.
5. விக்டோரியா டெக்னிக்கல் சாலையிலும் நிர்மித வஸ்துக்கள் செய்வதற்கு ஏற்பட்ட கற்பனை சாலையிலும் ஏற்படுத்தப்பட்ட பிரிவு.
6. கிராமக் கைத்தொழில் சாமான்கள் கிறிஸ்தமத மிஷன் மூலமாய் நடத்தப்படும் கைத்தொழில் சாமான்கள் அடங்கிய ஒரு பிரிவு.
7 பொதுஜன சௌக்கிய விஷயமாய் நியமிக்கப்படும் வைத்திய உத்தியோகஸ்தர்களால் உதவி செய்யப்பட்ட சானிடரி கமிஷனர், சர்ஜியன் ஜெனரல், இவர்களுடைய மேல்பார்வைக்கு உட்பட்ட தேக சௌக்கியம், பொதுஜன சௌக்கியம் சம்பந்தமான ஒரு பிரிவு.

கிராமக்கைத்தொழில்கள், கிறிஸ்துமத மிஷன் கைத்தொழில்கள், இவைகளின் பிரதிநிதிகள் தக்க காட்சி சாமான்களைச் சேகரித்துத் தருவதில் அவர்கள் செய்யும் உதவி வெகு நன்றியறிதலுடன் ஏற்றுக்கொள்ளப்படும் என்று இதின்மூலமாய் அவர்களுக்குத் தெரிவிக்கப்படுகிறது.

A. R. LOFTUS TOTTENHAM,
M. A., I. C. S.
Collector of Ramnad.

*Ramnad Collector's Office,*
*Madura. 25—9—1915.*



# குறித்தகாலத்துக்குள் தீர்த்துவிடுவதாய் இந்தியாகவர்ன்மெண்டார் வாங்கும் கடன்.

## இதற்காக ஜனங்கள் இன்ன ஷரத்துகளின்படி தபாலாபீஸ் மூலமாய்ப் பணம் செலுத்தலாமென்பதைக் குறித்த நோட்டீஸ்.

கவர்ன்மெண்டார் ஒரு புதுமாதிரியாக இந்த வருஷத்திய கடன் தொகையைச் சேகரிக்கிறார்கள்; இந்த கடனுக்கு வருஷத்துக்கு நூற்றுக்கு நாலு வீதம் வட்டிக்கொடுக்கப்படும். 1923-ம் ஞு நவம்பர் மாதத்துக்கு மேற்படாமல் இது பூர்த்தியாய்த் திரும்பக் கொடுக்கவிடப்படும்; ஆனால், 1920-ம் ஞு அக்டோபர் மாதத்துக்குப் பிறகு எப்போதாகிலும் கவர்ன்மெண்டார் அதைத் திருப்பக் கொடுத்துவிட விரும்புகிறபட்சத்திலே, அவர்கள் அந்தப்படியே செய்யலாம்

2. கல்கத்தாவிலும், சென்னபட்டணத்திலும், பம்பாயிலும், இதர பெரிய பட்டணங்களிலும் விண்ணப்பங்கள் வந்து ஏற்கனவே வழக்கப்படி நாலரைக்கோடி ரூபாய் கடன் வாங்கப்பட்டிருக்கிறது; இதுவரையில் இப்போது அந்தக் கடன் விஷயம் முடிவாயிருக்கிறது. ஆனால், இதோடுகூட, சிறு தொகைகளாகக் கடன்கொடுக்க விரும்புகிறவர்கள் ஸேவிங்ஸ் பாங்கில் பணம் கட்டிவைத்திருப்பவர்களாயிருந்தாலுஞ் சரி, இராவிட்டாலுஞ்சரி அப்படிப்பட்டவர்களும் ஸேவிங்ஸ் பாங்க் வேலை நடத்தும் அதிசமீபத்திலுள்ள தபாலாபீஸ்-மூலமாய்ப் பணம் செலுத்துவதற்குப் பிரத்தியேகமாக அவகாசம் ஏற்படுத்திக் கொடுக்கப்படுகிறது.

### இன்னவிதமாய்த் தொகை செலுத்தலாமென்பது.

3. அக்டோபர்மீ 30உ வரையிலே எப்போதாகிலும் தபாலாபீஸ் மூலமாய் விண்ணப்பங்கள் செய்துகொள்ளலாம்.

4. சரியாய் நூற்றுக்கணக்கான ரூபாய்க்காக விண்ணப்பங்கள் செய்துகொள்ள வேண்டும்; நூறு ரூபாய்க்குக் குறைந்த தொகைகளுக்காகவும், எந்த விண்ணப்பதாராயினும் 5,000 ரூபாய்க்கு மேற்பட்ட தொகைக்காகவும் விண்ணப்பங்கள் செய்துகொள்ளக்கூடாது.

குறிப்பு.—யாதொரு விண்ணப்பதாரர் தபாலாபீஸ் மூலமாய் நூற்றுக்கு 3½ வட்டி ப்ராமிஸரி நோட் என்னும் கடன் பத்திரங்களை முன்னமே வாங்கி வைத்திருந்தபோதிலும், அவர் 5,000 ரூபாய் வரையில் இந்தப்புதிய கடன் கொடுப்பதற்காக விண்ணப்பம் செய்துகொள்ளலாம்.

5. விண்ணப்பம் செய்துகொள்ள விரும்புகிறவர் அடியிற்கண்ட நமூனாவில் எழுதவேண்டியவற்றை எழுதவேண்டும்; ஸேவிங்ஸ் பாங்க் வேலை நடத்துகிற யாதொரு தபாலாபீஸிலுங்கூட இந்த நமூனா கிடைக்கும். அவர் எவ்வளவு தொகை கொடுப்பதற்காக விண்ணப்பம் செய்துகொள்ளுகிறாரோ அந்தத் தொகை முழுவதையும் அவர் அப்போதே செலுத்தவேண்டும். அவர் ஸேவிங்ஸ் பாங்கில் பணம் கட்டிவைத்திருக்கிறபட்சத்திலே, தன்னுடைய ஸேவிங்ஸ் பாங்க் கணக்கிலிருக்கும் பணத்தை இக்காரியத்துக்காக உபயோகிக்கலாம்; அல்லது, அவர் நேரில் ரொக்கமாய்ச் செலுத்தலாம். விண்ணப்பதாரர் தாமே தபாலாபீஸுக்குப் போகலாம், அல்லது ஒரு ஆளை அனுப்பலாம். செலுத்தப்பட்ட சகல தொகைகளும் பெற்றுக்கொண்டதாக ஒப்புக்கொண்டு ரசீது கொடுக்கப்படும்.

6. விண்ணப்பதாரர் செலுத்துகிற ஒவ்வொரு நூறு ரூபாய்க்காகவும், அதே தொகைக்கு கவர்ன்மெண்ட் கடன்பத்திரங்கள் அவருக்குக் கொடுக்கப்படும்.

### கடன்பத்திரங்கள் இன்னார்வசத்தில் இருப்பது.

7. இந்தப் பத்திரங்களை விண்ணப்பதாரர் தம் வசத்திலேயே வைத்திருக்கலாம்; அல்லது அவர் இஷ்டப்படுகிற பட்சத்திலே, அவை அவருக்காகத் தபாலாபீஸ் அதிகாரிகளின் வசத்தில் வைத்திருக்கப்படலாம். அவர் விண்ணப்ப நமூனாவில் எழுதவேண்டியவற்றை எழுதும்போது, எவ்விதமாய் அவைகளை வைத்திருக்க இஷ்டப்படுகிறாரோ அதை அவர் எழுதவேண்டும். அவர் அந்தப் பத்திரங்களைத் தம்மிடத்திலேயே வைத்துக்கொண்டிருக்க இஷ்டப்படுகிற பட்சத்திலே, அந்தப் பத்திரங்கள் ஒப்பிக்கப்படத் தயாராயிருக்கும்போது அதைக் குறித்துத் தபாலாபீஸார் அவருக்குத் தெரிவிப்பார்கள்; அவர் நேரில் வந்து ஹாஜராவதன்மேல், அவை அவரிடத்தில் ஒப்பிக்கப்படும். தபாலாபீஸாரிடத்தில் அவைகளை வைத்துவைக்க அவர் தீர்மானிக்கும் பட்சத்திலே, அவர் மறுபடியும் நேரில் வந்து ஹாஜராகவேண்டிய அவசியம் இருக்கமாட்டாது; ஆனால், அவைகளைத் தாங்கள் பெற்றுக்கொண்டிருப்பதாகவும் அவருக்காக அவைகளைத் தாங்கள் வைத்துக்கொண்டிருப்பதாகவும் தபாலாபீஸார் காலக்கிரமத்தில் அவருக்குத் தெரிவிப்பார்கள். அவர் அந்தப் பத்திரங்களைத் தம்மிடத்திலேயே வைத்துக்கொண்டிருக்க பிற்பாடு எப்போதாகிலும் விரும்புகிற பட்சத்திலே அவை அப்போது அவரிடத்தில் ஒப்பிக்கப்படும்.

### வட்டி கொடுப்பது.

8. வருஷத்துக்கு நூற்றுக்கு 4 வீதம் ஆறுமாதத்துக்கொருதரம் வட்டி கொடுக்கப்படும்; அதாவது, ஒவ்வொரு வருஷமும் மேமீ 31உ நூற்றுக்கு 2 வீதமும், நவம்பர்மீ 30உ நூற்றுக்கு இரண்டுவீதமுமாக கொடுக்கப்படும். பணம் செலுத்தின தேதிமுதல் அடுத்த நவம்பர்மீ 30உ வரையிலுள்ள ஆறுமாதத்துக்குக் குறைந்த காலத்துக்கு வட்டியானது கடன்பத்திரங்களை விண்ணப்பதாரர் தம்மிடத்திலேயே வைத்துக் கொள்ளுகிறதாயிருந்தால் அவை ஒப்புவிக்கப்படுகிற காலத்தில் ரொக்கமாய்க் கொடுக்கப்படும்; அல்லது அவர் அந்தப்பத்திரங்களைத் தபாலாபீஸ் அதிகாரிகளின் வசத்தில் வைத்துவைக்கிறதாயிருந்தால், அடுத்த பாராவிற்கண்ட ஸேவிங்ஸ் பாங்க் கணக்கிலே வரவு வைக்கப்படும்.

9. விண்ணப்பதாரர் தம்முடைய கடன்பத்திரங்களைத் தபாலாபீஸ் அதிகாரிகளின் வசத்தில் வைத்துவைக்கத் தீர்மானித்தால், ஷை அதிகாரிகள் ஒவ்வொரு அரை வருஷத்திலும் கிரமமாய் அவருக்காக வட்டிவாங்கி, அந்தத் தொகையை ஸேவிங்ஸ் பாங்க் கணக்கில் வரவு வைப்பார்கள்; இதற்காக அவர் பெயரில் புதிதாய் ஸேவிங்ஸ் பாங்க் கணக்கு ஒன்று வைக்கப்படும். இம்மாதிரியே வட்டி வாங்கப்படுகிறபோதெல்லாம் தபாலாபீஸார் அப்போதைக்கப்போது அவருக்குத் தெரிவித்துக்கொண்டு வருவார்கள். இந்தவேலைக்காக கட்டணமெதுவும் வாங்கப்படமாட்டாது; மேலும் அரை வருஷத்துக்கொருதரம் வட்டி செலுத்தப்பட்டுவரும்போது அதற்காக வருமானவரி யாதுவும் கழித்துக்கொள்ளப்படமாட்டாது.

அவர் இந்தப் பத்திரங்களைத் தம்மிடத்திலே வைத்துக்கொண்டிருந்தால், அரை வருஷத்துக்கொருதரம் வட்டி செலுத்தப்பட்டுவரும் காலத்திலே வழக்கப்படி அந்த வட்டியிலிருந்து வருமானவரி கழித்துக்கொள்ளப்படும்.

### கடன்பத்திரங்களை விற்பது

10. ஸேவிங்ஸ் பாங்கில் பணம் கட்டிவைத்திருப்பவர் இந்தப் புதிய கடன்விஷயமாக இதில் விவரிக்கப்பட்டபடி தபாலாபீஸ் மூலமாய் கடன்பத்திரங்கள் வாங்கிவைத்திருந்து அவைகளையாவது அவைகளின் யாதொரு பாகத்தையாவது மறுபடியும் விற்பனைசெய்ய எப்போதாகிலும் அவர் விரும்புகிறபட்சத்திலே, தபாலாபீஸார் தரகு அல்லது வேறே கட்டணங்களை வாங்காமலே அவருக்காக அவைகளை விற்பதற்கு ஏற்பாடு செய்வார்கள். இது விஷயமாய்ப் பூர்த்தியான விவரங்கள் வேண்டுமானால், அவைகளை எப்போதாகிலும் தபாலாபீஸிலிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

### விண்ணப்ப நமூனா.

1915-ம் ஞு ஜூலைமீ 28உயுள்ள இந்தியா கெஜட் விசேஷ பிரசுரத்தில் வெளியிடப்பட்டிருக்கும் விளம்பரத்திலே பிரசித்தஞ் செய்யப்பட்ட குறித்த காலத்துக்குள் தீர்த்துவிடப்படும் நூற்றுக்கு நாலு வட்டி கடனில் ரூபாய் ______
கொடுப்பதற்காக ______
ஆகிய நான் இதனால் விண்ணப்பம் செய்துகொள்ளுகிறேன்.

அசல் விலைக்கு எடுத்துக்கொள்வதற்காக நான் விண்ணப்பம் செய்துகொண்ட கடன்தொகைக்குச்சரியான ______ ரூபாயை நான் இதனுடன் கட்டுகிறேன்.

அசல் விலைக்கு எடுத்துக்கொள்வதற்காக நான் விண்ணப்பம் செய்துகொண்ட கடன்தொகைக்குச் சரியான ______ ரூபாய், தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கில் என்பெயரில் வரவாக நிற்கும் மிகுதித்தொகையிலிருந்து கிடைக்கும்படி செய்யவேண்டுமாய் நான்கேட்டுக்கொள்ளுகிறேன்.

அசல் விலைக்கு எடுத்துக்கொள்வதற்காக நான் விண்ணப்பம் செய்துகொண்ட கடன்தொகையைச் செலுத்தும்பொருட்டு, நான் ______ ரூபாயை இதனுடன்கட்டி, மிகுதித் தொகையாகிய ______ ரூபாய் தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கில் என்பெயரில் வரவாக இருக்கும் தொகையிலிருந்து கிடைக்கும்படி செய்யவேண்டுமாய் கேட்டுக்கொள்ளுகிறேன்.

(அவசியமில்லாத பாகங்களை அடித்துவிடவும்.)

என் பாகத்துக்காக ஏற்பட்டிருக்கும் கடன்தொகையைப்போஸ்ட் அண்ட டெலிகிராப்ஸ் அக்கௌண்டெண்டு ஜெனரலவர்கள் எனக்காக வைத்திருந்து, வட்டியைக் காலக்கிரமப்படி என்னுடைய தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்க் கணக்கில் வரவுவைக்கும்படியாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் பாகத்துக்காக ஏற்பட்டிருக்கும் கடன் தொகையை அடியிற் கண்ட * விபரப்படிக்குள்ள கடன்பத்திரங்களாக என்னிடத்தில் ஒப்பிவிக்கும்படியாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

(அவசியமில்லாத பாகத்தை அடித்துவிடவும்.)

பெயர் ______

மேல்விலாசம் ______

தேதி, 1915-ம் ஞு மீ உ

*[இதிற்கண்ட நமூனாவைக் கிழித்து உபயோகித்துக்கொள்ள விரும்புகிற பட்சத்திலே அந்தப்படியே செய்யலாம்.]

எ. பட்டர்வோர்த்,
சீப் ஸெக்ரெடரி.

## விளம்பரம்.

சிவகெங்கை பிரின்ஸிபல் டிஸ்டிரிக்ட் மூன்சிப் கோர்ட்டு.
ஷை கோர்ட்டு 1915ஞு அசல் நெ 174

வாதி:—கல்லுப்பட்டியிலிருக்கும் செ. க. தெய்வராயன் செட்டியார்

பிரதிவாதிகள்:— 1. ஒப்பக்கொண்டான் சிறுவயலிலிருக்கும் அள. அ. அரு. அருணாசலம்செட்டி.
2. ஷையார் மகன் சுப்பிரமணியன் செட்டி.
3. ஷையார் தம்பி அளகப்பசெட்டி.
4. ஷையார் தம்பி பழனியப்பசெட்டி. கல்லுப்பட்டியிலிருக்கும் 4-ம் பிரதிவாதி தம்பி அருணாசலம்செட்டி யாகிய,
5. காசிச்செட்டியார்.

ஷை வாதி ஷை கோர்ட்டில் பிரதிவாதிகளின் பேரில் ஷை தாவாவை கொண்டுவந்திருப்பதில் 1-முதல் 4-வரை பிரதிவாதிகள் சமனை பெற்றுக்கொள்ளாமல் தலைமறைவாயிருப்பதாக கோர்ட்டில் வாதி தெரியப்படுத்திக்கொண்டதில் ஷை பிரதிவாதிகள் ஷை கோர்ட்டில் 28—10—1915-ந் தேதி ஆஜராகும்பொருட்டு பஹிரங்கமாய் தெரிந்துகொள்வதற்காக இந்த பிரசுரம் கோர்ட்டார் உத்திரவுப்பிரகாரம் செய்யப்பட்டிருக்கிறது.

ஷை தாவாவின் சங்கதி பிரதிவாதிகள் வாதியின்பேரிலும் மற்றொரு வெட்சுமணன்செட்டியின்பேரிலும் தேவகோட்டை ஸ்மால்காஸ்கோர்ட்டில் 1909ஞு சூட் நெ. 2131-ல் பெற்றிருக்கும் டிக்ரி செல்லத்தக்கதென்றும் அது மோசமாக வாங்கப்பட்டதென்றும் ஷை டிக்ரியை ரத்து செய்யவேணுமென்றும், இந்த பிராதில் பரிகாரங்கள் கேட்கப்பட்டிருக்கிறது.

இந்த கேஸ் ஷை 1-முதல் 4-வரை பிரதிவாதிகள் ஆஜர் ஆகிறதற்காக 28—10—1915 தேதி வாயிதா யேற்பட்டிருக்கிறது என்று இதன்மூலமாய் கோர்ட்டார் உத்திரவுப்படி பஹிரங்கமாய் பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது.

வாதி:—சே. க. தெய்வராயன்செட்டி

சிவகெங்கை 2-10-1915. { B. Hanumantha Rao, Pleader for Plaintiff.

## புத்தக வரவு.

### ஸ்ரீமான் கோபாலகிருஷ்ணகோகலேயின் சரித்திரம்.

இப்புத்தக மொன்று நமது பார்வைக்கு வந்திருக்கின்றது இதை எழுதியவர் சென்னை சுதேசமித்திரன் சப் எடிட்டர் மிஸ்டர் K. விஸ்வநாதைய ரவர்கள். இம்மாதிரியான மஹான்களின் சரித்திரங்களைப் படிப்பதனாலும் அவர்களுடைய கொள்கைகளைப் பின்பற்றுவதனாலும் நம்மவர் அடையும் பயன் சொல்லும் தரத்ததன்று. ஆதலால் இதைப்போன்ற புத்தகங்கள் பயன் படப்பன வல்லவென்று சொல்லுவதற்கு இடமில்லை. கோகலேயின் சரிதமும் அன்னாரின் இந்திய ஊழியமும் மிக விரிவாக இப்புத்தகத்தில் காணப்படுகின்றன. இதன் நடை இனிமையாயும் எளிதாயுமிருக்கின்றது. நம்மவராலும் மேனாட்டாராலும் கொண்டாடப்படும் கோகலே பிறந்த வருஷம் இதிற் காண்கின்றோமேயல்லாது மாதம் தேதி முதலிய விவரங்களைக் காணோம். இப்புத்தகத்தின் விலை அணா 8 வேண்டியவர்கள் இதன் ஆசிரியரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

### ரிக்விதானம்.

இப்பெயர்கொண்ட புத்தகமொன்று நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இப்புத்தகம் காளையார்கோவில் T. K. இராமபத்ரசர்மா A. S. வெங்கடரமண சாஸ்திரி ஆகிய இருவருடைய முகவுரையுடன் விளங்குகிறது. சௌனக மஹாரிஷியால் எழுதப்பெற்ற மந்திர சாஸ்திரமாகும். இப்புத்தகம் தேவநாகர எழுத்தில் மேன்மையான கடிதத்தில் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணிவிலாஸ அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது. இப்புத்தகத்திலுள்ள ரிக்களுக்கு, ஸம்ஸ்கிருதத்திலோ தமிழிலோ—உரையொன்று இருந்தாலல்லாது சாமான்ய மனிதர்களுக்குப் பயன்படுவதற்கு ஏதுவில்லை யாதலால் கூடியசீக்கிரம் இதற்கு வியாக்யானம் வெளிவருமென்று நம்புகிறோம். இதன் விலை அணா 8. இராமநாதபுரம் ஜில்லா காளையார்கோயில் ஸ்ரீ ஸ்வர்ணவல்லீ விலாஸ புத்தகசாலையில் ப்ரம்மஸ்ரீ T. K. இராமபத்திரசர்மா அவர்களிடம் இப்புத்தகம் கிடைக்கும்.

## வைசியமித்திரன் ஆபீசில் கிடைக்கக்கூடிய தமிழ்ப் புத்தகங்கள்.

நாகை-ஸி. கோபாலகிருஷ்ணன் இயற்றிய நாவல்கள்.

| | | | |
|---|---|---|---|
| அமரஸிம்ஹன் | 1 | 0 | 0 |
| சித்திரரேகை | 0 | 12 | 0 |
| கண்மணி | 0 | 12 | 0 |
| தனபாலன் I | 0 | 12 | 0 |
| ௸ II | 0 | 12 | 0 |
| பத்மரேகை | 0 | 12 | 0 |
| சந்திரோதயம் | 1 | 0 | 0 |

பண்டிதர் T. S. இராஜமையர் இயற்றியவை.

| | | | |
|---|---|---|---|
| கல்பலதா அல்லது வெளிவராத ரகசியம் | 0 | 14 | 0 |
| ஷிரிப்பிரியை அல்லது பாண்டிநாட்டுப் பணப்புதையல் | 0 | 12 | 0 |
| இந்துலீகா | 0 | 8 | 0 |
| மாதவி அல்லது மாதவனின் மாயக்கோலம் | 0 | 6 | 0 |
| புராதன திரிசிரபுரம் | 0 | 1 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீமத் கம்பராமாயணம் 2-வது அயோத்தியா காண்டம் | 0 | 10 | 0 |
| பத்மநாபன் | 0 | 10 | 0 |
| தேவி சந்திர பிரபா | 0 | 10 | 0 |
| ஜலஜாக்ஷி | 0 | 10 | 0 |
| சுந்தரி மனோஹரன் | 0 | 12 | 0 |
| கமலினி | 0 | 0 | 0 |
| குலசேகரன் | 0 | 10 | 0 |
| ஹனுமான்சிங் | 0 | 12 | 0 |
| மாலிகாபூஷணி | 0 | 10 | 0 |
| ஞானமிருதம் | 0 | 10 | 0 |
| பிரேமகலாவதியம் | 0 | 12 | 0 |
| பிரபோத சந்திரோதயம் | 0 | 10 | 0 |
| ஜெகதல ஜோதி | 0 | 8 | 0 |
| தேவைத் திரிபந்தாதி | 0 | 8 | 0 |
| தத்துவஞானபோதினி | 0 | 8 | 0 |
| கர்ணன் | 0 | 2 | 0 |
| சீதை | 0 | 4 | 0 |
| லலித்தாங்கி | 0 | 8 | 0 |
| சுதர்ம கலாவதியம் | 0 | 6 | 0 |
| நவநீதம் | 0 | 3 | 0 |
| தசகுமார சரித்திரம் | 0 | 4 | 0 |
| உஷாபரிணயம் | 0 | 6 | 0 |
| மனோரமா | 0 | 8 | 0 |
| சந்திராவாசா | 0 | 8 | 0 |
| உமா | 0 | 8 | 0 |
| பஞ்சதந்திரம் | 0 | 5 | 0 |
| கண்ணம்மாள் | 0 | 8 | 0 |
| சின்னத்தம்பி | 0 | 4 | 0 |
| காற்பதலக்ஷ ரூபாய் | 0 | 3 | 0 |
| பாதுகா பட்டாபிஷேகம் | 0 | 8 | 0 |
| மிருச்சகடிகம் | 0 | 4 | 0 |
| அய்யாக்குட்டி | 0 | 1 | 6 |
| தாராவின் தந்திரம் | 0 | 2 | 0 |
| விநோதமஞ்சரி | 1 | 4 | 0 |
| விவேகானந்த விஜயம் | 1 | 4 | 0 |
| குசலோபாக்கியானம் | 0 | 6 | 0 |
| சிவராத்ரி புராணம் | 1 | 4 | 0 |
| கந்தபுராண வசனச் சுருக்கம் | 0 | 8 | 0 |
| மீனலோசனி | 0 | 8 | 0 |
| பவளக்கொடி | 0 | 3 | 0 |
| பங்கஜாக்ஷி | 0 | 8 | 0 |
| ஜெயவதி | 0 | 2 | 0 |

தேவகோட்டை
வீர. லெ. சின்னையாசெட்டியார்
அவர்களால் எழுதப்பட்ட
தேவைத் திரிபந்தாதி.

இப்புத்தகத்தில் தேவைத் திரிபந்தாதி, அருணாசலச் சிலேடை, மதுரை மீனாக்ஷியம்மை பதிகம், சிலப்பைப் பதிற்றுப் பத்தந்தாதி, மயின்மலைப் பிள்ளைத் தமிழ் முதலிய ஐந்து புஸ்தகங்கள் அடங்கியுள்ளன. இவைகளின் நடை எளிமையானதாகவும் அர்த்தபுஷ்டியுள்ளதாகவும் இருக்கும். இவ் வைந்து புத்தகங்களும் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டிருக்கும் புஸ்தகத்தின் விலை அணா 0 8 0

குறிப்பு:—இன்னும் பல நாவல்களும் வேறு எல்லாவகையான தமிழ்ப் புத்தகங்களும் நமது ஆபீஸில் விலைக்குக் கிடைக்கும். வெளியூர் வாசிகளுக்குப் புத்தகங்கள் வி. பி. மூலமாய் அனுப்பப்படும், தவிர, வக்காலத்துப் பாரங்கள் முதலான கோர்ட்டு சம்பந்தமான பாரங்களும் நம்மிடம் கிடைக்கும்.

மானேஜர்,
"வைசியமித்திரன்" ஆபீஸ்
தேவகோட்டை.

---

ஆனந்தமான பரிமளவாசனை எது?

## ஒட்டோ டில்பஹார்

(ரிஜிஸ்டர்டு) என்னும் **அத்தர் தான்**

இன்பமானதும், மேன்மையானதும், நீடித்ததும், உன்னதமான வாசனையுள்ளது. சகமான புஷ்பங்களைத் தெரிந்தெடுத்து அவைகளிலிருந்து எடுக்கப்பட்ட சுத்தமான அத்தர். சாராயம் அல்லது மற்ற ஸ்பிரிட் திராவக கலப்பே கிடையாது. உங்களுடைய, கை துவாலையிலாவது, சட்டையின் கையிலாவது சில துளிகள் விட்டால், உங்களைச் சுற்றி நல்ல வாசனை உள்ள புஷ்பத் தோட்டத்து பரிமள கந்தம் வீசும். மற்ற வாசனைகள் எவ்வளவு பலமாயிருந்தாலும், இந்த ஒட்டோ டில்பஹார் அத்தர்வாசனை, அவைகளை அடக்கி மேலோங்கி ஜனங்களுடைய மனதை சந்தோஷப் படுத்தும். இதை வாங்கி உபயோகப் படுத்திவருகிற அநேக கனவான்கள் கொடுத்த நற்சாக்ஷிப் பத்திரங்கள் பல இருக்கின்றன. அதை ஒரு பாட்டிலாவது வாங்கி உபயோகித்தால்தான், இதன் நற்குணம் அறியலாம்.

விலை விபரம்.

| | |
|---|---|
| சிறிய பாட்டில் ஒன்றுக்கு | ரூ...0—8—0 |
| ஒரு டிராம்பாட்டில் ஒன்றுக்கு | ரூ...0-12--0 |
| ½ அவுன்ஸ் (அதாவது நான்கு டிராம் பாட்டில்) ஒன்றுக்கு | ரூ...2—0—0 |

V. P. சார்ஜ் ஒரு பாட்டிலுக்கு நான்கணா, பிரத்தியேகம்.
ஒட்டோ டில்பஹார் (ரிஜிஸ்டர்டு) என்னும் பரிமள வாசனை உள்ள கார்டு ஒன்றுக்கு [விலை அணா ஒன்று
தென்னிந்திய ஏஜண்டுகள்.

சம்பத் அண்டு கம்பேனியார்,
சைனுபஜார், தெப்பக்குளம் திருச்சிறுபள்ளி.

---

குழந்தைகள்!
குழந்தைகள்!!
குழந்தைகள் விளையாடும்
பித்தளைப் பாத்திரங்கள்.

குழந்தைகள் விளையாடும் பித்தளை வெங்கலத்தால்செய்த செம்பு, குடம், கரண்டி, குத்துவிளக்கு முதலிய 32-சாமான்கள் அடங்கியது. அழகும் நேர்த்தியும் நைசுமானதும் குழந்தைகள் மனதைக் கவரக்கூடியதும் அற்புத வேலைப்பாடுள்ளதுமான 32 உருப்படிகள் அடங்கிய பெரிய செட்டு 1-க்கு ரூ 4—0—0 சிறியசெட்டு 1-க்கு ரூ 2—0—0.

விலாசம்:—

மானேஜர்
பட்டு பீதாம்பரக்கம்பெனி,
தாராநகர் தெரு, காசி.
SILK PITAMBER CO,
BENARES CITY,

---

உலகப் பிரசித்திபெற்ற

## மஹா சந்தனாதித் தைலம், அரைக்கீரை விதைத் தைலம்.

நாங்கள் மைசூர்வாசிகளாகையால் கிரெசென்ட் வேண்டுகோளின்பேரில் இவ்விடம் அத்தர் சாலையை அமைக்கலானோம் இத்தைலங்களின் பெருமையை அறியாதவரில்லை, ஆனால் இப்பெருமைவாய்ந்த தைலங்களை ஆண் பெண் சிசுக்களும் எந்த தேசத்திலும் யாதொரு தடையின்றி ஸ்நானஞ்செய்து, சிரசிலுள்ள நோய்களும், தேகத்திலுள்ள நோய்களும் அறவே நீங்கி நற்சுகமடைந்து ஆனந்தம்பெறக் கருதியே குறைந்த விலைக்குக் கொடுத்துவிற்கிக்கும் நன்மைக்கும் எதிர்பார்க்கிறோம் வாரம் இருமுறை வெந்நீர் சீயக்காயுடன் அதிகாலையில் ஸ்நானஞ் செய்து உடனே போஜனம் செய்யவேண்டியது. சுகந்தம் சிரேகத்தைவிட்டு விலகாது. தவிர புனுகு ஜவ்வாது அரகஜா திரவங்கள் சேலர் பவுடர் பச்சைவில்லைகள் ஊதுவத்திகள் அத்தர் திரவங்கள் சந்தன வில்லைகள் வாசனைப்பாக்கு வாசனைச்சுண்ணாம்பு தேங்காச்சிவல்கள் மேன்மையான கலவைச் சந்தனம் செண்டிரவகங்கள் வெள்ளி, தங்கம் இவைகளால் கொடுத்த ஜாதிக்காய், பத்திரி, கிராம்பு வாய்விளங்கு ரோஜாப்பூதல்கந்து சந்தனப்பவுடர் பல்பொடி குங்குமப்பூ பச்சைக்கல்பூரம் தெசாங்கம் ஸ்நானப்பொடி பன்னீர் பலகாய் வார்காய். இன்னும் அநேக சாமான்களும் விலை சரசமாயும் நயமாயும் கிடைக்கும் 18 பலம் சந்தனாதித் தைலம் டின் 1-க்கு ரூ 2-0-0 14 பலம் அரைக்கீரை விதைத் தைலம் ரூ 2-0-0. ¼ டஜன் ரூ 5—10—0.

மைசூர், இ. சா. பர்ஹத்தின் & Co.
அத்தர் வியாபாரம் பஜார், கும்பகோணம்.

---

உலகமெங்கும் பிரசித்திபெற்ற

## "காமினியா ஆயில்"

இந்த தைலம் அபூர்வமான மூலிகைகளைக்கொண்டு தயாரிக்கப் பட்டது; உபயோகப்படுத்த மனோகரமாயும், ஆனந்தமாயுமிருக்கும்; கூந்தல் அழகாயும் அதிகரித்தும் வளரும். மயிர் கால்கள் பலப்பட்டு கூந்தல் விழாமலிருக்கவும், கருப்பும் பளபளப்புமான கூந்தலுண்டாகவும், கண் குளிர்ச்சி யுண்டாகவும், காமினியா தைலத்திற்கொப்பான தைலம் வேறில்லை யென்பது திண்ணம்.

இதை உபயோகப்படுத்திவர மண்டை கொதிப்பு, தலைவலி, தலைச் சொட்டை, வழுக்கைத்தலை, ஞாபகக் குறைவு, கண் எரிச்சல், முதலிய வியாதிகள் நீங்கும். இத்தைலத்தின் வாசனையோ மிக இனிமையாயும் நீடித்து மிருக்கும்.

ஒரு பாட்டில் விலை ரூ 1—0—0, 3 பாட்டில்களுக்கு ரூ 2—10—0. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.

குல்ஷான் என்ற கூந்தல் தைலமும் காமினியா தைலமுறைப்படியே செய்தவை. சுகந்த வாசனையுங் கூடியவை.

இதுவும் பாட்டில் 1க்கு விலை ரூபாய் 1—0—0.

மாதிரி பார்க்க வேண்டியோர்கள் ஒரு அணா ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

தென்னிந்தியா ஏஜண்டு:— சம்பத் அண்டு கம்பெனி,
சைனு பஜார், தெப்பக்குளம், திருச்சினாப்பள்ளி.

---

பிரசித்திபெற்று விளங்கும்
நாராயணன்ஸ் பல்பொடி.

20 வருஷம் காலமாய் எங்கும் கீர்த்தி பெற்ற இந்த பல்பொடி, பல்வலி, ஈறு வீக்குதல், பல் கூச்சம், ரத்தம் வருதல், வாய் துர்நாற்றம், இவைகளைப் போக்கி பல்லுக்கு முத்துப்போல ஒளியைக் கொடுக்கும். ஒருதடவை உபயோகித்துப் பார்த்தால் வேறே எந்தப் பொடியையும் உபயோகிக்க மனம் நாடாது. நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் நற்சாக்ஷிப் பத்திரங்கள் கொடுத்திருக்கிறார்கள். சிங்கப்பூர் பம்பாய், பினாங்கு, முதலான இடங்களுக்கும் ஏராளமாய் அனுப்பப்படுகிறது.

சகலமான வியாதிகளுக்கும் மருந்துகள் இருக்கின்றன, எழுதினால் அனுப்பக்கூடும்.

விலையின் விபரம்.

டப்பா 1-க்கு ரூ 0—4—0
டஜன் 1-க்கு ரூ 2—12—0
1 குரோஸ் அல்லது 12 டஜன் விலை ரூ 32—0—0.

போஸ்டு செலவு பிரத்தியேகம்.

நேடிவ் டாக்டர், S. நாராயண ராவ்.
கோபாலகோத்தன் தெரு, மதுரை.

---

சாசுவதமான ஆரோக்கியத்தை யடைய சுலபமான வழி.

மதனமஞ்சரி மாத்திரைகள்

உபயோகிப்பதேயாகும். இம் மாத்திரைகள் அஜீரணம், மலச்சிக்கல், மனக் கலக்கம் நரம்புத் தளர்ச்சி ஸ்வப்ன ஸ்கலிதம், மேக வியாதி, ஞாபகமின்மை, பலயீனம், மூத்திரகோச வியாதிகள் இவை போன்ற கொடிய வியாதிகளை துரிதமாயும் வேருடனும் நீக்கிப் புருஷர்களுக்கு என்றைக்கு மழியாத புருஷத்தன்மையைக் கொடுக்கின்றன. டானிக் என்னும் பலவிருத்தி மருந்துகளில் இதற் கிணையில்லை. இம் மாத்திரைகள் சென்ற 25 வருஷ காலமாய் ஆயிரக்கணக்கான நோயாளிகளை சொஸ்தப்படுத்தி யிருக்கின்றன. உம்மையுங்கூட சொஸ்தப்படுத்தும். 40மாத்திரைகளடங்கியடப்பிவிலைரூ 1. விலையுமில்லை! தபாற்செலவுமில்லை!!

இனாம்!!!

144-பக்கங்களடங்கிய இந்த வைத்திய புத்தகத்தில் ஆயுள் முழுவதும் நோயற்றிருக்க அவசியமான குறிப்புகள் நிறைந் திருக்கின்றன. உம்முடைய விலாசத்தைத் தெரிவித்தால் உமக்கு ஒரு பிரதி அனுப்பப்படும்.

ராஜ வைத்திய
நாராயணஜீ கேசவஜீ
20 சைனுபஜார் ரோட்,
மதறாஸ்.

---

அனேக கண்காக்ஷிகளில் பொன் வெள்ளி மெடல் பெற்ற
புதுமாதிரி ஆஸ்திரேலியா பழச் செடிகள்.

உஷ்ண தேசம், குளிர்ந்த தேசம், இவை இரண்டிலும் பயிராகக் கூடியதும் ஒரு வருஷத்தில் பலந்தரக் கூடியதுமான ஆஸ்திரேலியா பழச்செடிகளும், சேலம் ஒட்டுமாங்கன்றுகள் பல மாதிரியிலும், மற்றப் பழவகைச் செடிகள், சீமைக் காய்கறி புஷ்ப விதைகள் உண்மையானதாயும் கிடைக்கும். அரையணா ஸ்டாம்பு அனுப்பி காட்லாக் பெற்றுக் கொண்டு தேவைக்கு எழுதுங்கள்.

ச. கொ. இ. காதர்மீரு சாயபு,
விதைகள், மாங்கன் வியாபாரி
சேலம்.

---

புதிய புஸ்தகம்.

ஜீவகாருண்யமாலை. விலை 0—1—0

எளிய தமிழில் அரியபாக்கள் அடங்கிய இந்த ஜீவகாருண்யமாலையானது பெரும் கொலையாளியைக்கூட கொலைத்தொழில் புரியாமலிருக்கும்படி செய்யும் என்பதிற் சந்தேகமில்லை. இப்புஸ்தக விற்பனையால் ஏற்படும் பணம் ஜீவகாருண்ய சங்கத்திற்கு சேர்க்கப்படுமாகையால் ஜீவகாருண்ய சீலர்கள் இப்புஸ்தகத்தை வாங்கி இம்முயற்சிக்கு ஊக்கமூட்டும்படி வேண்டுகிறோம். தபால் மூலியம் புஸ்தகம் வாங்க விரும்புகிறவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு 0-1-6 தபால்தலை யனுப்பிவைத்துப் பெற்றுக் கொள்ளலாம்.

காரியதரிசி
"வைசியமித்திரன் வாசகசாலை"
தேவகோட்டை.

Printed and Published by S. T. Ramanathan Chettiar at the 'Vysiamitran' Press., Devakota.

